# இராமநாதன்



தெ. துரைசாமி, எம்.எ.

# இராம தூதன்

465



ஆசிரியர்:
**தெ. துரைசாமி, எம். ஏ.,**
தமிழ்த்துணைப் பேராசிரியர்,
தேசியக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி-1.

**அருளகம்,**
**19, வைத்தியலிங்கம்பிள்ளை குடியிருப்பு,**
**கிராப்பட்டி, திருச்சி-620012.**

முதற் பதிப்பு: ஜூன்—1978.


விலை ரூ. 4-00.

## படைப்பு

—

என்னுடைய மூத்த தமையனார் உயர்திரு. தெ. உகந்தாச்சிநாத பிள்ளை அவர்களுக்கு இந் நூலைப் பணிவன்புடன் படைக்கிறேன்.

விஜய் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்,
உறையூர், திருச்சி-620 003.

டாக்டர் கு. திருமேனி,
எம்.ஏ., பி.ஓ.எல்., பி. எச்டி.,
முதுகலைத் தமிழ்த் துறைத் தலைவர்,
தேசியக் கல்லூரி, அவர்களின்

# அணிந்துரை

நண்பர் துரைசாமி அவர்கள் 'இராமதூதன்' என்ற தலைப்பிட்ட நூலொன்றை எழுதி என் மதிப்பீட்டுரை ஒன்றைத் தருமாறு கேட்டார்.

அனுமனைப் பற்றி இதுகாறும் கட்டுரைகள் வந்துள்ளனவே யன்றி நூல் வடிவில் ஒன்று வந்ததாகத் தெரியவில்லை. நண்பர் மேற்கொண்டது புதிய முயற்சி. கம்பர் அனுமனை நூல் முழுவதில் பல திறப்பட்ட பெயர்களிலும் அடைமொழிப் பெயர்களிலும் உவமைப் பெயர்களிலும் குறிப்பிடுகின்றார். அப்பெயர்களை ஒன்று விடாமல் தொகுத்து அவற்றைத் தம் நூலின் உட் கூறுகட்குத் தலைப்புக்களாக்கியுள்ளார். இது போன்று காப்பியத்தில் வரும் பல திறப்பட்ட பெயர்களை வைத்து அனுமன் வரலாற்றை ஒன்றுவிடாமல் காவியத்தில் அறிமுகம் ஆன இடத்திலிருந்து இறுதி வரையில் வரலாற்று முறையில் தொகுத்து எழுதியது ஒரு பெரிய புதிய நல்ல முயற்சி. அனுமனைக் கம்பர் கையாண்ட அனைத்து இடங்க ளோடு அவன் வரலாறு அறியும் நூல் இது ஒன்றுதான். கம்ப ராமாயண நூலைப் படிப்போர்க்கு நினைவு கொள்ள முடியாத பல இடங்களையும் நண்பர் குறித்துள்ளார். அனும பக்தர்கள், அனுமனைப்பற்றி அறிய விரும்பும் மாணவர்கள், அனுமனைப் பற்றிப் பேசப்புகும் மேடைப் பேச்சாளர்கள் அனைவர்க்கும் நண்பரின் இத்தொகுப்பு நூல் ஓர் எளிய, இனிய துணை.

திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த இந்நண்பர் நூலைப்படிக்கும் போது இவர், அம்மாவட்டப் புகழோடு கம்பன் புகழும் பரப்பிய ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களை

நினைவு படுத்துகின்றார். அவரைப் போல் அடுக்கு மொழியும் நிரல்பட்ட சொல்லாட்சியும் இடை இடையே வினாக்களை விடுத்துத் தாமும் அதில் தோய்ந்து சுவைத்தும் எழுதியுள்ளார்.

அனுமனைப் பற்றி மட்டும் எழுதாமல் அனுமனோடு தொடர்பு கொண்டார் அனைவர் செய்திகளையும் ஆங்காங்கே விரித்துரைக்கின்றார். அதனால் நூல் படிப்போர் அனுமனை ஒட்டி இராமாயணம் முழுமையும் கிட்கிந்தாக் காண்டத்திலிருந்து படித்துவிட்ட ஒருணர்வைப் பிறப்பிக்கின்றார். எளிய இனிய தம் நடையோடு கம்பன் நடையையும் இணைத்து அழகாக நூல் யாத்துள்ளார்.

எத்தகைய ஆரவாரமும் இன்றி இலக்கியப் பணியே தம் பணி என்று கொண்டு தமிழ் நூல்களை நல்லாசிரியர்களிடம் முறைப்படிக் கேட்டு நெறிப்படப் பயின்று ஆன்று அடங்கி இருபத்திரண்டு ஆண்டு தமிழ் பயிற்றுவித்தபின் இந்நூலை வெளியிடுகின்றார். கம்பராமாயணத்தை முழுமையாகச் செய்தி ஒன்றும் விடாது 'கம்ப நாடகம்' என்னும் பெயரில் ஒரு நூல் பதிமூன்று ஆண்டுகளுக்கு முன்னர் எழுதி வெளியிட்டுள்ளார். இனி மேலும் பல நூல்களை வெளியிடுவார் என எண்ணுகின்றேன். இத்தகைய நல்லறிஞரின் தொண்டு சிறக்கவும் நீடு வாழவும் வாழ்த்துகின்றேன். வளர்க இவர் புரி தமிழ்த் தொண்டு.

இங்ஙனம்,

**கு. திருமேனி.**

# என்னுரை

........

கம்பராமாயணத்தை நாடக உருவில் காண விழைந்தேன். அதன் விளைவே **'கம்ப நாடகம்'** என்னும் என் முதல் நூல் தோன்றக் காரணம். 'குரக்கின் உள்ளறிவான்', என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களால் பாராட்டப் பெறும் கல்வியிற் சிறந்த கம்பரால் காட்டப் பெற்ற இராம தூதனாகிய அனுமனின் செயல்பாட்டுத் திறனை அவர்வழி நின்று இந்நூலில் வெளிப்படுத்தியுள்ளேன். கவிச்சக்கரவர்த்தி காப்பியத்தில் ஆங்காங்கே மாருதியைப் பற்றிக் கூறியுள்ள பெயர்களையே நானும் தலைப்புப் பெயர்களாகக் கொடுத்து உள்ளேன்.

இந்நூலில் உள்ள கம்பராமாயணப் பாடல் தொடர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பாடல் எண்கள் உயர்திரு. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் அவர்களின் பதிப்பைப் பின்பற்றியன.

இந் நூலுக்குச் சிறந்ததோர் அணிந்துரை நல்கிய தேசியக் கல்லூரி முதுகலைத் தமிழ்ப் பேராசிரியர், டாக்டர் **கு. திருமேனி** எம். ஏ., பி.ஓ.எல்., பி. எச்டி., அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் வெளிவருவதற்கான ஊக்கமும் ஆக்கமும் தந்த தேசியக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. **இரா. இராதாகிருஷ்ணன்** எம். ஏ., அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் சிறந்த முறையில் உருவாக உதவிய உடன் பணியாற்றும் அருமை நண்பர் உயர்திரு. புலவர் **ம. இலக்குமிநாராயணன்** எம். ஏ., பி. டி., அவர்கள் ஆற்றிய உதவியினை மறக்க இயலுமோ? அன்னார்க்கு என்

நன்றி என்றும் உரியதாகுக. **விஜய் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்** நிறுவனத்திலிருந்து வெளிவரும் முதல் புத்தகம் என்னுடையதாக இருப்பது இருசாரார்க்கும் பெருமை தருவதாக அமைந்துள்ளது கண்டு மகிழ்ச்சியோடு அச்சக உரிமையாளர் உயர்திரு. **மானுவேல் இராஜ்குமார்** பி.ஏ.,பி.எட்., அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழுலகம் என் சிறிய முயற்சியினைப் பாராட்டி ஆதரவு நல்குமென எதிர்நோக்குகிறேன்.

திருச்சி—1
*15-6-78*

**தெ. துரைசாமி.**

# உள்ளுறை

---

23. செறி பெருங் கேள்வியன்
24. பேரறிவாளன்
25. காலனை ஒக்கும் தூதன்
26. அறத்தை ஓம்புவான்
27. கூற்றன மாருதி
28. நெடியன் குறியன்
29. புகழோன்
30. உதிக்கின்ற கதிரோன் ஒத்தான்
31. வீரர்க்கும் வீரன்
32. நீதி வித்தகன்
33. அருக்கன் மாணவகன்
34. செங்கைத் தனு போல்பவன்

---

# 1. அனுமன்

1 " அஞ்சிலே யொன்று பெற்ற னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்ரு ருக வாரியற் காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்குகண் டயலா ரூரில்
அஞ்சிலே யொன்றை வைத்தா னவனெம்மை யளித்துக்
காப்பான் "

'விருத்தமென்னு மொண்பாவி லுயர் கம்பன்' பாடிய காப்புச் செய்யுள் இது. ஐம்பெரும் பூதங்களில் ஒன்ருகிய வாயு தேவனிடத்துத் தோன்றியவனும், ஐம்பெரும் பூதங்களில் ஒன்ருகிய விண்ணின் வழியாகச் சென்றவனும், ஐம்பெரும் பூதங்களில் ஒன்ருகிய நீரைத் (கடலை) தாண்டிச் சென்றவனும், அறத்தின் நாயகனுன இராமபிரானின் ஆணையைத் தலைமேற்கொண்டு இலங்கையில் ஐம்பெரும் பூதங்களில் ஒன்ருகிய நிலமகள் பெற்ற சீதாதேவியைத் தேடிக் கண்டு நாயகன் உரைத்த செய்திகளைக் கூறியவனும், பகைவர் ஊருக்கு எரியூட்டிப் பாழ்படுத்தி வெற்றியுடன் மீண்டவனுமான அனுமனின் திருவருள் துணை நிற்க வேண்டுமென்று கவிச் சக்கரவர்த்தி வணங்குகிருர். இராம நாமத்தின் பெருமையினை அனுமனைவிட அறிந்தவர் யார்? எனவே இராம காதை பாட விழைந்த கவிஞர் அவனைத் தன் சிந்தையுள் வைத்துப் போற்றியதில் வியப்பில்லையே!

தள்ளரும் பெரும்புகழ் உடைய தயரத வேந்தன் தனக்கு மகப்பேறு இல்லாக் குறையை அமைச்சன் வசிட்டனிடம் தெரிவிக்கிருன். நல்லவர்க்குத் தொல்லை கொடுக்கும் அரக்கரை அழித்துத் தேவரைக் காப்பதாகப் பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் பரந்தாமன் அவர்க்கு வாக்களித்தமையை வசிட்டன் நினைத்துப் பார்க்கிருன்.

---

1 பால-காப்புச் செய்யுள்.

[2] ''மன்றலந் துளவினுன் வருந்தல் வஞ்சகன்
தன்றலே யறுத்திடர் தணிப்பன்'' என்றும்,
[3] ''வானுளோ ரனேவரும் வானரங்க ளாகக்
கானினும் வரையினும் கடிதடத் தினும்
சேனேயோ டவதரித் திடுமின்''

என்றும் திருமால் திருவாய் மலர்ந்தருள, மகிழ்ந்த தேவர்கள் பூவுலகில் வானரங்களாகத் தோன்றலாயினர். அவருள் ஒருவன் தான் காற்றின் மதலே.

இந்திரன், தனது கூருக வாலியையும், அவன் மகன் அங்கதனேயும் கூறுகிருன். அவ்வாருகச் சூரியன் தனது கூருகச் சுக்கிரீவனேக் குறிப்பிட, அங்கியம் கடவுள் நீலனே தனது கூறு என்று இயம்ப, வாயுவும் சிவபெருமானும் தமது கூருக மாருதியைக் கொள்ள வானர வம்சம் தேவர்களேக் கொண்டு உருவாகிறது.

## 2. [4] சொல்லின் செல்வன்

அனுமனே அவன் பெயரில் அமைந்த அனுமப் படலத்தில் முதன் முதலில் காண்கிருேம். பஞ்சவடியில் சிதையைக் காணுது இராம இலக்குவர் பெரிதும் துன்புற்று அவளேப் பல விடங்களில் தேடி வருகின்றனர். இராம இலக்குவரோடு போரிட்டுச் சாபம் நீங்கப் பெற்ற கவந்தன் கந்தர்வனுகிருன். அவன் இருவரையும் வணங்கிச் சிதையைத் தேடும் பணியில் சுக்கிரீவன் துணேயினேயும் கொள்ள வேண்டும் என்றும், [5] 'தாயினு முயிர்க்கு நல்கும்' சவரி காட்டும் நன்னெறியில் செல்ல வேண்டும் என்றும் தன் கருத்தினேத் தெரிவிக்கிருன். அவ்வண்ணம் இருவரும் இரலே மலே வந்தடைகிருர்கள்.

இந்திரன் மகன் வாலி என்னும் தன் அண்ணனுக்குப் பயந்து அம்மலேயில் மறைந்து வாழும் சுக்கிரீவன் மானிடர்

---

2 பால-திருவவ-199 3 பால-திருவவ-200
4 கிட்கி-அனுமப்படலம் 5 ஆரணிய-கவந்தப்படல-1194

இருவரைக் கண்டு நடுங்குகிறான். வாலியின் ஏவலால் வரும் வீரரோ என்று நினைத்து வெருவி ஓடுகிறான். அமைச்சன் அனுமனிடம் உண்மை கண்டு கூறுமாறு வேண்டுகிறான். அஞ்சி ஓடும் வானரரை அனுமன் தேற்றுகிறான். 'நொதுமலராய் வந்தோர் நல்லவரே, நம்மவரே' என்ற எண்ணத்தை வானரர் மனதில் பதிய வைத்து அச்சத்தை நீக்குகிறான். ஒரு கணம் நோக்கியவுடனே அவர்தம் இயல்பினை அறியும் ஆற்றலைப் பெறுகிறான்.

''கையில் வில்லேந்தித் தவக் கோலம் கொண்டு சினத்துடன் தோன்றும் இவர் யார்? மும்மூர்த்திகளோ? இன்னொருவர் எங்கே? தேவரோ? மனித உருவில் தோன்றும் இவர் இழந்த பொருளைத் தேடும் நிலையில் தோன்றுகிறார்களே! இவர்கள் தேடும் பொருள் யாதோ?'' என்று அனுமன் எண்ணியவாறே ஒரு மாணவக் கோலத்துடன் அருகில் சென்று பணிவுடன் நிற்கிறான்.

[6] 'தன் பெருங் குணத்தால் தன்னைத் தானல தொப்பிலான்' வேறு எவ்வாறு நிற்பான்?

[7] ஞானநாதராகிய இராம இலக்குவரைக் கண்டவுடன் காட்டின் நிலை மாறுதல் அடைவதை உற்று நோக்குகிறான். கொடிய விலங்குகள்கூட, தம் அன்பினைக் காட்டும் வகையில் மானிடரைப் பின்பற்றிச் செல்கின்றன. கதிரவனின் வெப்பக் கதிர்கள் தாக்கா வண்ணம் மயில்கள் தோகை விரித்துப் பந்தல் இடுகின்றன. அன்பினுக்கு அவதி இல்லைதான்!

[8] ''கவ்வையின் றாக நுங்கள் வரவு''. என்ன பணிவான வரவேற்புரை! இருவரின் வருகை சுக்கிரீவனின் மனத்துயரை மாற்றும் நன்மருந்தாகும். வானரரின் கூட்டுறவு இராமபிரானின் வேதனையை மாற்ற ஏதுவாகும். இவ்வாறு அனுமன் வருபொருள் நன்கு உணரும் ஆற்றலன் என்பதை அவன் வாக்கால் உணரலாம்.

---

6 கிட்கி-அனுமப்பட-54 7 கிட்கி-அனுமப்பட-47
8 கிட்கி-அனுமப்பட-47.

இராவணனின் தங்கை சூர்ப்பணகையின் வருகையின் நோக்கத்தைப் புரிந்து கொண்ட இராமனின் வரவேற்புரை யினை ஈண்டு நோக்கல் தகும்.

9 'தீதில் வர வாகுதிரு நின்வரவு சேயோய்'

'நுங்கள் வரவு துன்பமில்லாது இருக்கட்டும்' என்ற அனுமனின் பணிவுரைக்கும், 'தீமையில்லாது இருக்கட்டும் உன் வரவு' என்று சூர்ப்பணகையை நோக்கிக் கூறிய இராமனின் அறிவுரைக்கும் எத்துணை வேறுபாடு உள்ளது? அனுமன் வேண்டுகோளில் துன்பம் நீங்கி இன்பம் தழைக்கும் என்ற உண்மையினைக் காண்கிறோம். ஆனால் சூர்ப்பணகையின் வருகை துன்பத்தின் தொடக்கம் என்று இராமபிரானின் வர வேற்புரை தெரிவிக்கிறது என்று எண்ண இடம் தருகிறது.

இராமனின் திருமேனி அழகில் மெய் மறந்து நிற்கும் அனுமனைப் பற்றி இராமன் வினவுகிறான். கருக் கொண்ட மேகம் போன்ற கரிய திருமேனியான் அறம் தழைக்கத் துயர் நீக்கவே அவதரித்துள்ளான் என அறிந்து அனுமன் துதி பாடுகிறான். என்றும் குவியாத செந்தாமரை மலர் உண் டென்றால் அது இராமனின் கண்ணழகிற்கு ஈடாகும். காமுற்று நோக்கும் பெண்களுக்கு அருள் செய்யாத ஏக பத்தினி விரதன் இராமனின் கண்கள் நஞ்செனத் தோன்று மாம். இவ்வாறு அனுமன் புகழ்ந்ததோடு அல்லாமல் தன்னைப் பற்றியும் சுருக்கமாகத் தெளிவாகவும் கூறுகிறான்.

10 ''மஞ்செனத் திரண்ட கோல மேனிய மகளிர்க் கெல்லாம்
நஞ்செனத் தகைய வாகி நளிரிரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சமொத் தலர்ந்த செய்ய கண்ணயான் காற்றின் வேந்தற்கு
அஞ்சனை வயிற்றின் வந்தே னுமமு மனும னென்றான்''

இராமனின் வினவிற்கு அனுமன் விடுத்த மாற்றம் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறனிற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம்.

---

9 ஆரணிய-சூர்ப்பணகைப்-262 10 கிட்கி-அனுமப்-57

[11]''இம்மலை யிருந்து வாழு மெரிகதிர்ப் பரிதிச் செல்வன்'' என்று தன் அரசன் சுக்கிரீவன் மறைந்து வாழும்நிலை குறித்து எவ்வளவு அழகாகக் கூறுகிறான். 'ஆம்! இரலை மலை விட்டால் சுக்கிரீவனுக்குப் புகலிடம் ஏது? இங்கே இருப்ப தால் ஏதோ வாழ்ந்து கொண்டிருக்கிறான். வெளிப் போந்தால் வாலி துரத்தி அடித்து வீழ்த்துவான்' என்னும் கருத்து புலப்படுவதைக் காணலாம். மேலும் அவன் தன் அரசனாதலின் அவனுக்குரிய அடைமொழியாகச் 'செம்மல்' என்று கூறுகிறான் போலும்!

அனுமனின் சொல்லாற்றலைக் கண்டு இராமன் இலக்கு வனை நோக்கி,''யார்கொலிச் சொல்லின் செல்வன்? ஆற்றல், நிறைவு, கல்வி, அறிவு என்னும் இவை நிறைந்த இவன் பிரமனோ? அன்றிச் சிவனோ? என்றும், உருவத்தாலன்றிச் செயலால் மதிப்பிடுவதற்கு உரியவன் என்றும், அச்சாணி போன்ற இவன் ஆற்றலைப் பின்னர் தெரிந்து கொள்வாய்'' என்றும் கூறி மகிழ்கிறான். அனுமன் மூலம் அங்குள்ள நிலைமையினை அறிந்த இராமன் சூரியன் சேயைக் காண விழை கிறான். இராம இலக்குவரை ஏழுலகம் காக்கும் முதல்வர் என்று தன் அறிவால் கண்டு ஏத்தி வணங்குகிறான்.

[12]''எம்மையே காத்தி ரென்ற லெளிதரோ விமைப்பி லாதோர்
தம்மையே முதலிட் டான்ற சராசரஞ் சமைந்த வாற்றல்
மும்மையே முலகுங் காக்கு முதல்வர்நீர் முருகற் செவ்வி
உம்மையே புகல்புக் கேமுக் கிதின்வரு முறுதி யுண்டோ''

இவ்வாறு அனுமன் தன் நன்றியினைத் தெரிவித்துவிட்டு, அவர்களை யார் என்று வினவுவது தன் தகுதிக்கு ஏலாது என்று கருதி [13]'யாரென விளம்பு கேனா னெங்குலத் தலைவற் கும்மை' என்கிறான். இலக்குவன் அதற்குப் பதில் கூறுகிறான். அனுமன் இராமனின் திருவடிகளில் வீழ, அச்செயல் தருமத் திற்கு மாறுபட்டது என இராமன் கூறுகிறான். அதற்கு

11 அனுமப்-61 12 அனுமப்-70

அனுமன் [14]'அடியேன் ருனு மரிக்குலத் தொருவன்' என்று பணிவுடன் சொல்லி விண்ணளவு உயர்ந்து நிற்கிருன். அனுமனின் பேருருத் தோற்றம் கண்ட இராமன்,

[15] 'நாட்படா மறைக ளாலு நவைபடா ஞானத் தாலும்
கோட்படாப் பதமே யைய குரக்குருக் கொண்டது'

என்று நாவாரப் போற்றுகிருன். அனுமன், வேதங்கள், மெஞ்ஞானம், எவராலும் அறியவியலா வீட்டுலகம் எடுத்த வரிவடிவம் போன்றவனும்! இராமபிரான் இதயத்தில் அனுமன் நீங்கா இடம் பெற்றுவிட்டான் என்பதற்கு இதை விடச் சான்று வேறு என்ன வேண்டும்?

## 3. [16]அஞ்சனை சிங்கம்

கடலைக் கடக்கப் புணை வேண்டும். துணை இலாதவனுக்குப் பகைவரை அழிக்க இயலுமோ? இது கவந்தன் இராம இலக்குவரைப் பார்த்துக் கேட்ட வினு. அதன்படி இருவரும் சுக்கிரீவனைக் காண வருகிருர்கள். வாலியின் உயிரைக் கவரவல்ல காலன் இராமனே என்று மகிழ்ந்தவாறே அனுமன் உருத்திர நடனம் ஆடுகிருனும்! இன்னுயிர்க்கு அமுதமென விளங்கும் இராமனின் திறனைச் சுக்கிரீவன் உணருமாறு செய்கிருன்.

''தயரத குமரர் கிட்கிந்தை ஆட்சியினை அருளுவர். அல்லவரை அழித்து நல்லவரைக் காப்பவர். தாடகை, கரன் போன்ருேரின் அழிவும், அகலிகையின் உய்வும் இராமனின் விரத்தின் ஈரத்தின் செயல்களே! தக்கன் வேள்வியில் கலந்து கொண்ட சூரியனின் பல்லை உடைத்த சிவனின் வில்லை முறித்து மிதிலைச் செல்வியாம் சீதையை மணந்த வீரன் இராமனே. நாம் உய்யவே தம்பியுடன் ஈண்டு வந்துள்ளான்'', என்று அனுமன் தலைவன் சுக்கிரீவனிடம் அறிவிக்

14 அனுமப்-76 15 அனுமப்-79 16 நட்புக்கோட்படலம்-110

கிறான். மேலும், தன்னுட்சியினைத் தம்பி பரதனுக்கு அளித்த இராமன் விராதனை இராவகை துடைத்து மன்னு யிரைக் காத்தான் என்றும், ஏமாற்ற எண்ணுபவரை ஏமாறச் செய்யும் ஆற்றலன் என்றும், அரவணைப் பள்ளிப் பரந்தா மனே அவன் என்றும், கவந்தன் சவரி ஆகியோர்க்கு முத்தி அளித்தவன் என்றும், வல்லரக்கன் இராவணன் கவர்ந்து சென்ற சீதையைத் தேடிவரும் அவர்கள் வானரர் துணை வேண்டி நிற்கிறார்கள் என்றும் அனுமன் சுக்கிரீவனிடம் எடுத் துரைக்கிறான். இதனால் அவனுக்கு இராம இலக்குவரைக் காணும் ஆர்வம் பொங்குகிறது. மானிடர் இருவரும், வானரர் தலைவரும் அனுமனின் நல்ல முயற்சியால் நட்பால் பிணைக்கப்படுகிறார்கள். அவர்தம் கூட்டுறவு அரக்கர் அழி விற்கு மூலகாரணம் என்பதை ஓர்ந்து அனுமன் வாழ்த்து கிறான்.

[17]''பொருந்து நன்மனைக் குரிய பூவையைப்
பிரிந்து ளாய் கொலோ நீயும்'' என்று இராமன் சுக்கிரீ வனை நோக்கி வினவியதற்கு அனுமன் விரிவாகப் பதிலுரைக் கிறான்.

''நீதியோய்! வாலி வேதப் பயிரின் வேலி! பாற் கடலைத் தான் தனியனாய் நின்று கடையும் தீரன். எங்கும் எளிதில் பாய்ந்து செல்லும் ஆற்றலன். எதிர்ப்பவர் ஆற்ற லில் பாதியினைப் பெறும் வர பலத்தை உடையவன். சிவனை மறவா அன்பினன். முருகவேள் வேலும் செல்லாத உர முடையான். இவன் வால் செல்லா இடமே இராவணன் கோல் செல்லும் இடம். சூரிய சந்திர இயக்கமும், கடலின் ஒலியும், காற்றின் சுழற்சியும் வாலியிடம் கொண்ட அச்சத் தின் விளைவுகளே! இராவணனை வாலில் பிணித்து பறந்து திரிந்த இவனை வெல்ல யாரால் இயலும்? மாயாவி என்ற அவுணனுக்கும் வாலிக்கும் நடந்த போரில், வாலி அவனைத் துரத்திப் பிலத்தினுள் நுழைந்தவன் இருபத்தெட்டு திங்கள்

---

17 நட்புக் கோட்-116

கடந்தும் திரும்பி வரவில்லை. எனவே வானரர் சுக்ரீவனைக் கிட்கிந்தை ஆட்சிப் பொறுப்பை ஏற்க வற்புறுத்தியும் அறத்திற்கு மாறுன செயலைச் செய்ய மனம் ஒப்பவில்லை என்று சூரியன் சேய் மறுத்து 'அண்ணனை எரித்தவனை அழிப்பேன் அல்லது உயிர் துறப்பேன்' என்று சூளுருரைத்துப் போருக்குப் புறப்பட, வானரரோ தடுத்து விடுகிருர்கள். வாலியைக் கொன்று மாயாவி திரும்புவானே என்ற அச்சத்தால் பிலமும் அடைக்கப்படுகிறது. கிட்கிந்தை ஆட்சியினை வானரர் அன்புக் கட்டளையால் சுக்கிரீவன் ஏற்கவும் நேரிட்டதே தவிர இவனுகவா இவ்வாட்சியினை ஏற்றுக்கொண்டான் ? வாலியே மாயாவியைக் கொன்று அடைக்கப்பட்டிருந்த பிலத்தைச் சிதைத்துச் சீற்றத்துடன் வந்து சுக்கிரீவனேடு போரிட்டான். தன் நிலையினை அண்ணனுக்குச் சுக்கிரீவன் எடுத்துச் சொல்லியும் சினங்கொண்ட வாலி யாவரும் அஞ்ச இவன் உடலைக் கடைந்தனன் ! அண்ணனிடம் இருந்து விடுபட்டு ஏழு கடலைத்தாண்டி சக்கரவாள மலைக்கு அப்பால் சென்ற சுக்கிரீவனை வாலி பின் தொடர்ந்து பிடித்துக்கொண்டான். அங்கிருந்தும் தப்பி, மதங்க முனிவர் சாபத்தால் வாலி வரவியலா இம் மலையில் தஞ்சம் புகுந்து வாழ்கிருன். மேலும் மனைவி உருமையும் வாலியால் கவரப்படவே இருமையும் இழந்து இன்னல் உறுகிருன்'' இவற்றை எல்லாம் இராம இலக்குவர் கேட்டு வியப்படைகிருர்கள்.

## 4. [18]சமீரணன் மகன்

வாலியின் அடாத செயல் இராமனுக்குச் சீற்றத்தை விளைத்தது. அவனைக் கொன்று சுக்கிரீவனைக் காப்பதாக வஞ்சினம் உரைக்கிருன். சுக்கிரீவன் இராமனின் ஆற்றலைப் பற்றி ஆராய அனுமனுடன் தனியிடம் செல்கிருன். சமீரணன் (வாயு) மகன் தன் அரசனின் ஐயத்தை நீக்கி இராமன் யார் என்பதைக் கூறித் தெளிய வைக்கிருன்.

---

18 நட்புக்-158 19 நட்புக்-160

19 ''சங்கு சக்கரக் குறியுள தடக்கையிற் ருளில்
எங்கு மித்தனே யிலக்கணம் யாவர்க்கு மில்லே
செங்கண் விற்கரத் திராமனத் திருநெடு மாலே
இங்கு தித்தன னீண்டற நிறுத்துதற் கின்னும்''

அறத்தின் மூர்த்தி திருமாலே என்கிருன். பிரமனேப் பெற்ற பரமனே வாழ்த்தி அடித்தொண்டு செய்யுமாறும், அது இருவருக்கும் முத்தி அளிக்கும் என்று தந்தை வாயு தன்னிடம் அன்று ஆணேயிட்டதையும் கூறுகிருன். மராமரங்கள் ஏழினே யும் துளேக்கும் ஆற்றல் இராமனின் வில்லுக்கு உண்டென்ருல் வாலியின் மார்பைப் பிளக்கும்ஆற்றலும் அதற்கு உண்டெனத் தெளியலாம் என்ற ஒரு கருத்தினேயும் சுக்கிரீவனிடம் தெரி விக்கிருன். அதற்கு இசைய, இராமனின் கணே ஏழுமரா மரங்களே ஊடுருவி மீள்கிறது. எங்கும் மகிழ்ச்சியால் எழுந்த இராம நாமம் விண்ணே எட்டுகிறது.

இராவணனுல் கவர்ந்து செல்லப்பட்ட வேளேயில் சீதை எறிந்த அணிகல முடிப்பைச் சுக்கிரீவன் காட்ட இராமன் அடைந்த துன்பத்தைக் கூற இயலுமோ? இனிக் கவலேப்படு வதால் பயனில்லே என்றும், மேற்கொள்ள வேண்டிய செயலே ஆய்தல் நன்று என்றும் தன் கருத்துக்களேப் பணிவுடன் மொழிகிருன் அனுமன்.

20 ''கொடுந் திறல் வாலியைக் கொன்று கோமகன்
கடுங்கதி ரோன்மக ளுக்கிக் கைவளர்
நெடும்படை கூட்டினு லன்றி நேடரிது
அடும்படை யரக்கன திருக்கை யாணேயாய்''.

அதன் பின்னர் வானரப் படையின் ஆற்றலேக்காணலாம் என்கிருன். இராமன் வாலியின் மீது சீற்றங் கொண்டு கணே ஒன்று ஏவ வாலி சினத்தினுல் இராமனே இகழ்ந்து உரைக் கிருன். பின்னர் வலி ஒடுங்கிச் சீற்றம் கெட்டு உண்மையினே

19நட்புக்-160 20 கலங்காண்-231

உணர்கிருன். இராவணனே வாலால் பிணித்து இராகவன் முன்வைக்கும் ஆற்றல் பெற்றும் வாய்ப்பு இழந்தமைக்காக வருந்துகிருன். குரங்கினத்து ஆற்றலோன் ஆன அனுமனே இராமனிடம் அறிமுகம் செய்யும் இடம் நம் நெஞ்சை நெகிழ் விக்கச் செய்கிறது.

[21]'அனுமனென் பவனே யாழி யைய நின் செய்ய செங்கைத் தனுவென நினேதி' என்கிருன். வாலி வீர சுவர்க்கம் அடைந் ததும் அனுமன் கணவனின் வெற்றுடலேத் தழுவிப் புலம்பும் தாரையினேத் தேற்றி அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டு மகன் அங்கதனேக் கொண்டு வாலியின் ஈமச் சடங்கினேச் செய் கிருன். விதியின் செயல் விதிமுறைப்படி நடக்க அனுமன் செயலாற்றி வரும் திறன் அறிந்து இன்புறத் தக்கது.

# 5. மாருதி

மாருதி கொண்டுவந்த பட்டாபிடேகப் பொருளால் இலக்குவன் இராமனின் ஆணேயின்படிச் சுக்கிரீவனுக்கு முடி சூட்டிக் கிட்கிந்தை மன்னன் ஆக்குகிருன். அறத்தின் நாய கனின் அறிவுரையினேக் குரங்கினத்து அரசன் செவிமடுத்து நான்கு திங்கள் கழிந்ததும் அவன் வேண்டிய வண்ணம் வானரப் பெரும் படையுடன் தான் வருவதாகக் கூறி வணங்கி நிற்கிருன்.

மாருதி, இராம இலக்குவருடன் இருந்து தனக்குத் தெரிந்த கைத்தொழில் இயற்றிக் காலம் கழிப்பதாக வேண்ட, இராமபிரான் அதற்கு இசையவில்லே. வாலியிடமிருந்து வலிந்து கைப்பற்றிய சுக்கிரீவன் ஆட்சியில் நன்மையும் தீமை யும் விளேயலாம். அப்பொழுது அவற்றைத் தாங்கி ஆட்சி யின் மாட்சியினே நிலேநிறுத்தும் பொறுப்பு அனுமனேயே சாரும், என்று இராமன் கூறியவுடன் மாருதி வணங்கி நிற்கிருன்.

---

21 வாலி-வதை-375

மாரிக் காலம் கழிகிறது. இன்ப மயக்கத்தில் மயங்கிக் கிடக்கிருன் சுக்கிரீவன். இராமபிரானின் சீற்றம் அளவு கடக்கிறது. இலக்குவனைச் சுக்கிரீவன் அவைக்கு எச்சரித்து வர இராமன் அனுப்புகிருன். சுக்கிரீவனின் போக மயக்கத்தையும், இலக்குவனின் சீற்றத்தையும் கண்ட அனுமன் செய்வது என்ன என்று சிந்தித்துத் தாரையின் உதவியால் நிலைமையைச் சீராக்கலாம் என்ற முடிவுக்கு வருகிருன். வெற்றியும் பெறுகிருன் என்று கூறவும் வேண்டுமோ? தாரை வானர மகளிருடன் வந்து இலக்குவன் சீற்றம் தணிவதற்குக் காரணமாகிருள்.

[22]''அந்தமில் கேள்வி நீயுமயர்த்தனை'' என்று இலக்குவன் தன்னை நோக்கிக் கேட்க, அனுமன் அவனடி தாழ்ந்து தன் நாவன்மையால் தக்க மாற்றம் உரைக்கிருன்.

''வீர ! எவரையும் கொன்றவர்க்குக்கூட உய்யும் நெறி உண்டு. ஆனல் செய்ந்நன்றி கொன்ருர்க்கு உய்வுண்டோ? உங்கள் நட்பு எங்களுக்கு உண்டாக அடியேனும் ஒரு காரணம் ஆவேனே ! நட்புச் சிதைந்தால் நாங்கள் உய்வோமா? நீவிர் செய்த நன்றியினைக் கவியின் வேந்தன் மறக்கவில்லை. பல திசைகளில் இருந்து வரும் வானரர் வருகையினை எதிர்நோக்கி உள்ளான். சுக்கிரீவன், தன் சொல் பிறழ்ந்தால் பிறந்தும் பிறவாதவனே ஆவான். நரகமும் தவருது வந்து சேரும்'', என்று பணிவன்புடன் அனுமன் கூற, அவனுடைய சொல்லின் தண்மை இலக்குவனின் சிற்றத்தின் வெம்மையினை அவித்தது எனலாம்.

தேவியை மாற்ருன் கவர்ந்ததால் ஏற்பட்ட சீற்றமும், மானமாகிய தீயும் இராமபிரானைச் சுட்டெரிக்கிறதைக் கண்டபின், தன்ஞல் பாவியரை அழிக்காமல் இருக்க முடியாது என்பதை அனுமனுக்கு இலக்குவன் எடுத்துரைக்கிருன்.

---

22 கிட்கி-கிட்கிந்தைப் படலம்-634

விதியை யாரே வெல்வார்? அனுமனைக் கண்டவுடன் இராமன் அவன்மேல் காட்டிய அருளையும் பின்விளைவினையும் அழகாக இளையவன் நினைவுபடுத்துகிறான். தன் வில்லாற்ற லினால் சீதையைத் தேட இராமனுக்கு அரிதோ?

[23]"தாழ்வித்தி ரல்லீர் பன்னாள் தருக்கிய வரக்கர் தம்மை
வாழ்வித்தீ ரிமையோர்க் கின்னல் வருவித்தீர் மரபிற் றீராக்
கேள்வித்தி யாளர் துன்பங் கிளர்வித்தீர் பாவந்தன்னை
மூள்வித்தீர் முனியா தானை முனிவித்தீர் முடிவில்"

என்கிறான். இவ்வாறு கூறிய இலக்குவனை, மாருதி மீண்டும் தொழுது பிழைபொறுக்க வேண்டுமென வேண்டிச் சுக்கிரீ வனிடம் அவனை அழைத்துச் செல்கிறான். இங்கும் அனுமனின் செயல் திறம் சிறந்து விளங்குகிறது.

உலகெங்கும் இருந்துவரும் வானரப் படையினரைத் திரட்டி இராமனிடம் வந்துசேர அனுமனுக்குச் சுக்கிரீவன் ஆணையிடுகிறான். அனுமன் அவ்வாணை வழியே செல்கிறான்.

# 6. [24]நெறி வலான்

எழுபது வெள்ள வானரப் படையினைக் கண்டு மகிழ்ந்த இராமன், சுக்கிரீவனை மேல் விளைவனவற்றை ஆராயும்படி ஆணையிடுகிறான். வானரவேந்தன் அனுமனின் ஆற்றலைப் புகழ்கிறான். அனுமன், தன் தந்தை வாயுபோல விரைந்து சென்று செயலாற்றும் திறன்மிக்கவன் என்று பாராட்டு கிறான். மேலும், அனுமன் செயலில் ஈடுபடாமல் காலம் தாழ்த்துவது ஏனைய வானர வீரரின் செயலைக்காண எண்ணித்தானோ என்று வியந்து கூறுகிறான்.

---

23 கிட்கி-கிட்கிந்தைப்பட-647    24 கிட்கி-பட691

மூவுலகிலும் சீதையைத் தேடி வானரப் படையினரை நோக்கி ஆணையிடுகிறான். தென்திசைக்கண் உள்ள இலங்கைக்கு ஏகி எதிர்க்கும் அரக்கரை வென்று உண்மை கண்டு மீள அனுமன், அங்கதன், சாம்பன் போன்றோருடன் இரண்டு வெள்ளம் வானரப்படை சுக்கிரீவன் ஏவலால் புறப்பட்டுச் செல்கிறது. ஒரு திங்கள் எல்லைக்குள் திரும்பி வர வேண்டுமென்ற ஆணையினையும் நினைவிற்கொண்டு, சுக்கிரீவன் கூறிய நெறியில் வானரப் படை விரைகிறது.

அப்பொழுது அனுமனைத் தனியே இராமபிரான் அழைத்துச் சென்று தேவியின் அங்க அடையாளங்களையும், சில குறிப்பிடத்தக்க செய்திகளையும் கூறி, மோதிரம் ஒன்றையும் அளித்து விடை கொடுத்து அனுப்புகிறான். தன் மனைவியின் உறுப்பு அழகினை எடுத்துக் கூறும் அளவிற்கு இராமபிரானுக்கு அனுமன் நம்பிக்கைக்கு உரிய தொண்டனாக இருப்பதைக்கண்டு மகிழலாம். இது வேறு எங்கும் காணாத புதுமையன்றோ!

இராமனின் திருவருளைத் துணையாகக் கொண்டு, அனுமன் வானர வீரர்களுடன் தென்திசைக்கண் உள்ள விந்தியமலை, நருமதையாறு போன்ற இடங்களில் தேடி வருகிறான். ஏமகூட மலையைச் சார்ந்து அம்மலைதான் இராவணன் இருப்பிடமோ என்று நினைத்து வானரப்படை சினங்கொள்கிறது. ஏமாற்றமே மிஞ்சுகிறது. அங்குப் பாலைவனத்துப் பிலத்தினுள் நுழைகிறார்கள். அக்குகை இருண்டிருப்பதைக் கம்பர் ஆதவனுக்குப் பயந்த இருள் அங்குத் தஞ்சம் அடைந்ததோ என்னும்படியாக இருக்கிறது என்கிறார். அப்பிலத்திலிருந்து வெளியேற வழியறியாது வருந்திய வானரர் அனுமனைச் சார்ந்து தம்மைக் காக்குமாறு வேண்ட, அவனும் தன் வாலைப் பிடித்துக்கொள்ளும்படிச் சொல்லி மெல்ல அழைத்துச் செல்கிறான்!

பன்னிரண்டு யோசனை தூரம் படர்ந்த மெய்யினன் அனுமன், இருட்பிழம்பைத் தன் காது குண்டல ஒளி விலக்க ஒருவாறு அங்குள்ள ஒரு நகரை வந்தடைகிறான்.

கற்பகக்கா போன்ற பொன்னிற மரங்கள், கோபுரம், புரிசை முதலியவற்றேடு கூடிய அந்நகரம் பொன்னகரத்தினையும் தன் அழகால் விஞ்சித் தோன்றுகிறது. ஆடவரையோ பெண்டிரையோ அங்கே காணமுடியவில்லை. அது ஓவியவல்லான் தீட்டிய சித்திரம்போலக் காட்சி அளிக்கிறது. அரக்கன் இராவணன் செய்த சூழ்ச்சியோ என்று மயங்கிய சாம்பனை அனுமன் தேற்றி, வெளியேற வழி தெரியவில்லை என்றால் பிலத்தின் மேற்புறத்தைத் தகர்த்து வெளியேறலாம் என்றும் கூறுகிறான்.

அப்பொழுது அங்கே, சீதையோ என்று வானரர் மயங்கும்படி அழகிய அருளுடைய சுயம்பிரபை என்ற தெய்வப்பெண் தோன்றுகிறாள். ஆனால் அனுமனே இராமனின் திருவாக்கினால், அவள் சீதையல்லள் என்பதை எளிதில் அறிகிறான். வானரர் வருகையான் தன் தவம் கலைந்ததால் அவள் முதலில் சீற்றம் அடைந்து, அனுமன் மூலம் வந்த விபரம் அறிந்து சாந்தமடைகிறாள். தன்னைப் பற்றிய விபரத்தைச் சுயம்பிரபை அனுமனுக்குக் கூறுகிறாள். மயன் என்னும் அசுரன் பிரமனிடம் தவமிருந்து அந்நகரைப் பெற்றதையும், அவன் விரும்பிய ஏமை என்ற தேவமகளைத் தான் அவனிடம் சேர்ப்பித்ததையும், இந்திரன் சீற்றத்திற்கு மயன் பலியானதையும், தனக்கும் தண்டனை அளித்த இந்திரன் வானரர் வருகையால் இடர் நீங்கும் என்பதையும் விரிவாகக் கூறுகிறாள். சுயம்பிரபை தன்னைக் காக்க வேண்டும் என்று கேட்க, அனுமன் பேருருவங்கொண்டு பிலத்தைத் தகர்த்துக் கடலில் எறிந்து ஆரவாரிக்கிறான். அவளும் அவனுக்கு நன்றி செலுத்தி வானுலகம் சேர்கிறாள். அனுமனைத் தொடர்ந்து வானரவீரர் செல்கிறார்கள்.

## 7. [26] வாய்மைசால் ஆரியன்

ஒரு பொய்கைக் கரையில் வானரருடன் இருந்த அங்கதனை ஓர் அசுரன் தாக்க, அவனை அங்கதன் தாக்கிக்

---

25 கிட்கி-ஆறுசெல்-909

கொல்கிறன். வாய்மைசால் ஆரியனை அனுமனிடம் அவ்வசுரனைப் பற்றித் தெரியவில்லை என்று அங்கதன் கூறு கிறன் என்று சாம்பன் அவர்களுக்குத் தெரிவிக்கிறன். பின்னர் அங்கிருந்து புறப்பட்டுப் பெண்ணையாறு வழியாக விதர்ப்பநாடு, தண்டகாரணியம், பாண்டுமலை, கோதாவரி யாறு, சுவணையாறு போன்ற இடங்களையும் கடந்து குலிந்த நாடு வந்தடைகிறார்கள். மேலும் அருந்ததி, மரகதம், வேங்கடம் போன்ற மலைகளைக் கடக்கிறார்கள். வேங்கட மலையில் அடியவர்களின் திருவடிகளை வணங்கி அந்தணர் வேடம் அணிந்து தொண்டை நாட்டிற்குச் செல்கிறார்கள். அதன்பின், சோழ பாண்டிய நாடுகளையும் கடந்து தென் கடலைச் சார்ந்த மகேந்திர மலையினை வந்து அடைகிறார்கள்.

எங்கெங்கு தேடியும் அங்கங்குச் சீதா தேவியைக் காண முடியாததினல் அவர்கள் வருந்துகிறார்கள். எடுத்த செயலை முடிக்கவும் அறியாமல், இறக்கவும் துணியாமல் வாளா நிற்கும் நிலைக்கு அங்கதன் பெரிதும் வருந்த அவனைச் சாம்பன் தேற்றுகிறன். இன்னும் தேடவேண்டிய இடங்கள் பல உள என்றும், தேவியைக் காணும் பணியில் தோல்வி ஏற்படின், சடாயுவைப் போல வீரமரணத்தைத் தழுவலாம் என்றும் அனுமன் பலவாறு கூறி வானரருக்கு இதமான சொற்களை உரைக்கிறன்.

அப்பொழுது சம்பாதி என்னும் கழுகரசன் தன் தம்பி சடாயு இறந்தான் என்ற செய்தியைச் செவிமடுத்துத் துயரத்துடன் வருகிறன். அவனை வானரர் அரக்கனே என்று அஞ்சுகிறார்கள். அனுமன் அவனைத் தூயவன் எனக் கூறு கிறன். அனுமன் சம்பாதியிடம் சடாயுவின் வீரமரணத்தைப் பற்றித் தெரிவிக்கிறன். தன் தம்பியின் மரணம் சீதையைக் காப்பதற்காகவே என்று அறிந்து சம்பாதி துயர் நீங்கி,

[26] வாழ்வித் தீரெனை மைந்தர் வந்துநீர்
ஆழ்வித் தீரலிர் துன்ப வாழிவாய்
கேள்வித் தீவினை கீறி னீரிருள்
போழ்வித் தீருரை பொய்யி னீங்கினீர்''

---

26 கிட்கி-சம்பாதி-1002

என்று பாராட்டுகிருன். இராமநாமத்தினைக் கூறவேண்டு மென்று வானரரை வேண்ட அவர்களும் கூறக் கதிரவனின் வெப்பத்தால் கரிந்திருந்த சம்பாதியின் இறகுகள் மீண்டும் முளைத்து வளர்கின்றன.

இராவணன் சீதையைக் கவர்ந்து இலங்கையில் சிறை வைத்திருப்பதைக் கூறி, இடையில் தடையாக உள்ள கடலை வல்லான் ஒருவன் முனைந்தால் கடக்கலாம் என்றும், அனைவரும் கடலைக் கடந்து சேறல் எளிதன்று என்றும் கூறிச் சம்பாதி விடை பெற்றுப் பறந்து செல்கிருன்.

தேவி இருக்கும் இடம் அறிந்த வானரர் மகிழ்ச்சியும், கடலைத் தாண்டுவது எவ்வாறு என்ற குழப்பமும் ஒரு சேர அடைகிருர்கள்.

27 ''மாருதி யொப்பார் வேறிலை''

என்று அனுமனைச் சாம்பன் புகழ்கிருன். வீரர் புகழ் வீரரே அறிவார். ஆம்! சாம்பன் அனுமனின் ஆற்றலை வானரரிடம் விளக்கிக் கூறுகிருன்.

''வீரர்களே! பிரமனுக்கு அழிவுண்டு என்ருலும் அனு மனுக்கு அழிவுண்டோ? சாத்திர அறிவோடு நாவன்மையும் பெற்றவன். அனுமன் கருதியதை முடிக்கும் போர்வீரன் அன்ருே! இயற்கை அவனை என் செய்யும்? நன்மை தீமை நன்கு அறியவல்லான். சூரியனைத் தீண்டவேண்டுமா? மலைகளைத் தாண்டவேண்டுமா? மழைத் துளியிடையே நுழைந்து செல்லவேண்டுமா? அனைத்தும் வல்லவன் அனுமனே! இந்திரன் கணையினுல் அனுமனின் மயிர் ஒன்றை யாவது களைய முடிந்ததா? வாலியின் அழிவிற்கு யார் காரணம்? எண்ணிப் பாருங்கள். சூரியன் தேர் முன்னே நடந்தே ஆரிய நூலைக் கற்றவனுயிற்றே! மாதர் நலம் பேணுமல், நீதி வாய்மை நெறி நின்று வேதப் பொருளை

27 கிட்கி-மயேந்திரப்-1029

உணர்ந்த அறிஞன் எனலாம். இராம பக்தியில் ஆழ்ந் திருக்கும் அனுமன் தனக்கு உரிய காலம் வரும் வரை அடங்கவும் வல்லன்; உரிய காலம் வரின் அடக்கவும் வல்லன்! எனவே அனுமனே கடல் கடந்து வினைமுடித்து மீள வல்லவன்.

இவ்வாறு சாம்பன் கூறவே அனைவரும் அனுமனைப் பாராட்டுகிறார்கள். தன் மீது வானரர் கொண்ட நம்பிக் கையால் அனுமனும் உளம் மகிழ்ந்து தன்னால் கடலைத் தாண்டவும், இலங்கையைப் பெயர்த்து எடுக்கவும், அரக்கரை அழிக்கவும் முடியும் என்று வீரவுரை பகர்கிறான். வானரர் அருளும், இராமன் ஏவலும் இரு சிறகுகளாகத் தனக்கு அமையும் என்கிறான். இவ்விதம் கூறிய அனுமன் மகேந்திரமலையினை அடைந்து பேருருக்கொண்டு நிற்கிறான். அனைவரும் வியந்து நோக்குகிறார்கள்.

28 ''வன்னெடுஞ் சிகர கோடி மகேந்திர மண்டந் தாங்கும்
பொன்னெடுந் தூணின் பாதசிலையெனப்
பொலிந்து நின்றான்''

எனக் கவிஞர் கூறுவார். நம்மைக் காவிய இன்பத்தில் திளைக்கச் செய்வார்.

# 8. [29] குரக்குச் சீயம்

சுந்தரகாண்டத்தின் நாயகன் அனுமனே! அவனுடைய ஆற்றலைப் படலங்கள் மூலம் நன்கறியலாம். மகேந்திரமலையில் நிற்கும் அனுமன் தேவர் உலகையும் காண்கிறான். ஆனால் ஆண்டுத் தேவியைக் காணவில்லை. இலங்கையை நோக்கு கிறான். தோள் கொட்டி ஆரவாரிக்கிறான். அவன் காலைச்

28 மயேந்திரப்-1050 29 சுந்தர-கடறாவு-36

சிறிது ஊன்றிய அளவிலே மலே நிலேகுலேகிறது. உயிரினங்கள் இரிந்து ஓடுகின்றன. அவன்மீது விண்மீன்களுடன் மேகங் களும் தவழ்கின்றனவாம். மகேந்திர மலேயோ பூமிக்குள் புதைகிறதாம். பூமி கடலாகவும், மலே கலனுகவும். அனுமன் அக்கலத்தின் மீது விளங்கும் பாய்மரம் போலவும் விளங்கு வதாகக் கம்பர் விளக்குகிருர். தேவர்கள், முனிவர்கள், மக்கள் வாழ்த்த, அனுமன் கடலேக்கடக்க மலேயிலிருந்து பாய்ந்து செல்கிருன். அவன் சென்ற வேகத்தால் கடல் பிளக்கிறது. அதனுல் நாக உலகம் தெரிகிறதாம். நாகரோ அஞ்சுகிருர்கள். அனுமன் செல்லும் முன் இலங்கையைக் கடல் அலேகள் மோதுகின்றனவாம். இராவணனின் செருக்கை அடக்கச் செல்லும் கயிலே மலேபோல விரைந்து செல்கிருன். அவனுக்குச் சூரிய சந்திரர், மேருமலே, வாயு, கருடன் திருமகளின் ஆணேச் சக்கரம் போன்றவற்றை இணேயாகச் சொல்லலாம். காலினுல் உலகை அளந்தான் திருமால்! வாலினுல் விண்ணே அளக்கிருன் மாருதி!

சிவன்-அனுமன் செயலால் ஒன்றுபடுகிருர்களாம்! அவன் வாலும், காலன் பாசமும் ஒன்றெனத் திகழ்கின்றனவாம்! அரக்கரைக் கண்டு அஞ்சிய காலன், தன் பாசத்தை முன் கொண்டு செல்ல அஞ்சியே அனுமனின் வாலாகப் பின் கொண்டு செல்கிருனும்! அவனுடைய இருகரங்களும் இராம இலக்குவரை ஒத்திருக்கின்றனவாம்!

ஆயிரம் சிகரங்களே உடைய மைநாகமலே கடலில் இருந்து, ஐராவதம், திருமால், மந்திரமலே எழுந்தபோன்று வெளிப்படுகிறது. ஆடியில் உழுந்து உருள் பொழுதிற்குள் மண்ணுக்கும் விண்ணுக்கும் இடையே நிற்கும் மைநாக மலேயைக் கடக்கும் அனுமன் அஞ்சவில்லே. அவன் தன் மார்பினுல் அதனேத் தள்ளிச் செல்கிருன். அம்மலே மானிட வடிவம் தாங்கி அவனிடம் பேசுகிறது. அனுமன் செயலுக்குத் தான் இடையூறு செய்ய வரவில்லே என்றும், இந்திரனிடமிருந்து தன்னேக் காத்தவன் வாயு என்றும் கூறுகிறது. அவன் மகனே அனுமன் என்று அறிந்ததால் தன்

மீது அமர்ந்து இளப்பாறிச் செல்லவேண்டுமென்று கேட்ப தற்காக வந்ததாகக் கூறுகிறது. நற்பணியில் ஈடுபட்டுச் செல்லும் அனுமன் அருகில் கடலும் வேண்டவே தான் வந்தாக அம்மலை தான் வந்த காரணத்தைத் தெரிவிக்கிறது. தாயினும் சிறந்த நிலையில் தன்னை அனுமன் எண்ணித் தங்கிச் செல்ல வேண்டுமென்ற அம்மலையின் அன்பு வேண்டுகோளை ஏற்பதற்கில்லை என்று அனுமன் பக்குவமாக எடுத்துரைக் கிருன். இராமனுடைய அன்பினைத் தனக்குக் கவசமாகக் கொண்டிருப்பதால் துன்பமில்லை என்றும், மலையின் அன்பினைக் கண்டு மகிழ்ச்சி உறுவதாகவும், திரும்பி வரும் பொழுது விருந்து ஏற்றுச் செல்வதாகவும் அனுமன் மறுமொழி கூறிச் செலவினைத் தொடர்கிருன்.

அனுமனின் ஆற்றலை அறியத் தேவர்கள் சுரசை என்னும் தெய்வப் பெண்ணை அரக்கியாகச் செல்லுமாறு பணிக் கிருர்கள். அவளும் அவனை எதிர்ப்பட்டுத் தனக்கு உணவாக வந்ததாக ஏளனம் செய்கிருள். 'பேழ்வாயினுள் புகுந்து உணவாகப் பசி களைவாய்' என்றும், தப்பிச் செல்ல வேறு வழியில்லை என்றும் கூறுகிருள். அதற்கு அனுமன் மறுமொழி யாகப் பெண்ணின் பசி கண்டு தான் இரங்குவதாகவம், வினைமுடித்து மீளும்பொழுது பசி நீக்க வருவதாகவும் உற்ற நண்பன் போலக் கூறுகிருன். மீண்டும் அவள் அச்சுறுத்தவே அவ்வரக்கியின் பேழ்வாய் வழியாகப் பேருருவம் எடுத்துச் செல்ல எண்ணிய அனுமன், தன் உருவத்தைச் சுருக்கி அவள் வாய் வழியே பாய்ந்து வெளியேறுகிருன். தேவர்கள் அனுமனின் ஆற்றலைக் கண்டு மலர்மாரி பொழிந்து மகிழ் கிருர்கள். சுரசை என்னும் பெண் தன் உருவம் மீண்டும் எடுத்து, அனுமனை, 'எடுத்த செயல் இனிதே முடிக்கும் தீரன் வாழ்க, வெல்க' என்று வாழ்த்திச் செல்கிருள். தேவர்கள் அனுமனின் ஆற்றலை அறியவே நாக அன்னையை அனுப்பிச் செய்த நாடகம் சுவையானதுதான்!

மது கைடபர் என்னும் இரு அரக்கர் தமக்கு வரம் அளித்த திருமாலையே கொல்ல முற்பட அவர்களைத்

திருமால் தந்திரத்தால் அழித்தார். அவ்வரக்கர் போன்று கொடிய அரக்கி அங்காரதாரை என்பவள் அனுமனை வழி மறிக்கிறாள், அரக்கியின் அறிவற்ற செயலைக் கண்டு அனுமன் நகைத்து அவளை யாரென வினவுகிறான். அங்காரதாரை அனுமனை நோக்கிப் பெண் என்று இகழவேண்டாம் என்றும், எதிர்ப்பவர் எமனுலகு அடைவர் என்றும் செருக்குடன் பேசுகிறாள். உடனே அனுமன் அவளுடைய பேழ்வாயில் நுழைகிறான். அறக்கடவுள் அஞ்சி அலறும்போதே தூணிடைத் தோன்றிய கோளரி போன்று அனுமன் அரக்கியின் வயிற்றைக் கிழித்து வெளியே செல்கிறான்! அக் காட்சியைக் கண்டோர் அடைந்த நிலை குறித்துக் கவிஞர் கூறுவதைக் காண்போம்.

30 ''ஆர்த்தனர்கள் வானவர்க டானவ ரழுங்கா
வேர்த்தனர் விரிஞ்சனும் வியந்து மலர் வெள்ளம்
தூர்த்தன னகன் கயிலை யிற்றலைவி லோனும்
பார்த்தனன் முனித்தலைவ ராசிகள் பகர்ந்தார்''.

இராம நாமமே துன்பத்தை நீக்க வல்லது என்று எண்ணிக் கூறிய வண்ணம் அனுமன் பறந்து சென்று இலங்கையில் உள்ள பவளமால் வரை மீது பாய்கிறான். இராம நாமத்தின் பெருமையினைச் சிந்தித்த அனுமன் நிலை குறித்துக் கம்பர்,

31 ''ஊறுகடி தூறுவன வூறிலற முன்னுத்
தேறலி லரக்கர்புரி தீமையவை தீர
ஏறுவகை யாண்டைய விராமனென வெல்லாம்
மாறுமதின் மாறுபிறி தில்லென வலித்தான்''

என்று பாடுகிறார்.

இராவணன் வாழும் நகருக்குப் பொன்னகர் ஈடாகாது. எல்லாப் போகங்களையும் விரும்பியவர்க்கு அளிக்கும் ஆற்றல் இலங்கை பெற்றிருப்பதால் துறக்கம் என்று கூறலாம்.

---

30 கடலுறு-86 31 கடலுறு-89

பேரறிவு உடையோராலும் அளந்தறிதற்கு அரிய இலங்கையின் அழகில் ஈடுபடுகிருன் அனுமன்.

# 9. [32] கவிக்கு நாயகன்

திரிகூட மலேமேல் உள்ள இலங்கையின் அழகினே அனுமன் பவளமலே மீதிருந்து நோக்குகிருன். விண்ணே அளாவும் மாடங்கள் பொன்னுலும் இரத்தினங்களாலும் இயற்றப்பட்டனவோ என எண்ணும்படியாக அமைந்துள்ளன.மேருவை அசைக்கும் ஆற்றல் உடைய வாயுவும் இராவணனின் நகர் என்ற அச்சத்தால் தென்றலாக அசைந்து வருவானும். அங்குப் பணிப்பெண்கள் தேவ மகளிரே! கருநிறத்து அரக்கியர், கால்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசியுள்ளனர். தெய்வத்தச்சன் விசுவகன்மன் அமைத்த சிற்பங்கள் அழகுடன் திகழ்கின்றன.

அனேத்து உயிர்க்கும் தஞ்சமளிக்கும் திருமாலின் வயிறு போல இலங்கை இவ்வாறு சிறந்து விளங்குகிறது. இலங்கையில் உள்ள குதிரைகளின் எண்ணிக்கையினேச் சூரியன் தேர்க் குதிரைகளேக் கழித்துக் கணக்கிட வேண்டுமாம்! தேவர்கள் இராவணனின் ஏவலேக் கேட்கும் பணியாளராக விளங்கும் இலங்கையில் பல்வகை ஓசையும் ஒளியும் சிறந்து விளங்குகின்றன. மேருமலே நாணும்படிச் சிறந்து விளங்கும் கோபுரம் ஒருபுறம் வளர்ந்தோங்கி நிற்கிறது. மதிலின் ஒளி சூரியன் கண்ணெளியினே மங்கச் செய்யும் என்றேதான் சூரியனும் அதனருகில் செல்லாமல் விலகிச் செல்வதற்குக் காரணமாம்!

[33] ''பளிக்கு மாளிகைத் தலந்தொறு மிடந்தொறும் பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண்ணறுஞ் சோலேகடோறும்
அளிக்குந் தேறலுண் டாடுநர் பாடுந ராகிக்
களிக்கின் ருரலாற் கவல்கின்ரு ரொருவரைக் காணேன்''

---

32 ஊர்தேடு-227 33 ஊர்தேடு-125

என்னும் அனுமன் சிந்தனையில் இராவணனின் ஆட்சியின் மாட்சியினை அறியலாம்.

அனுமன் இலங்கையின் பலவிடங்களையும் காண்கிறான். அரக்கர் அறியக்கூடாதென்று தன் உருவத்தைச் சுருக்கிக் கொள்கிறான். இரவுப் பொழுது வருகிறது. நிலவு வெளிப்பட்ட வேளையில் அனுமன் நகரினுள் நுழைகிறான். பாதுகாவலோடு கூடிய மதிலையும் காவலையும் கவனித்தவாறே அனுமன் வாயில் வழியாகச் செல்வதற்குப் பதில் மதிலைத் தாண்டுகிறான். அப்பொழுது எட்டுத் தோள்களும் நான்கு முகங்களையும் உடைய இலங்காதேவி அவனைத் தடுத்து நிறுத்துகிறாள்.

34''அளியா லிவ்வூர் காணு நலத்தி னணைகின்றேன்
எளியே னுற்றால் யாவ துனக்கிங் கிழவென்றான்''

அனுமன் அவளை நோக்கிக் கூற அவள் அவனை விரட்ட முற்படுகிறாள்.

35''சொன்னா யேநீ யாவனடா தொல் புரமட்டான்
அன்னா ரேனு மஞ்சுவ ரெய்தற் களியுற்றால்
உன்னா லெய்து மூர்கொலிவ் வூரென் றுறநக்காள்''

இலங்கா தேவியின் மொழி கேட்டு நகைக்கும் அனுமனை, வீணாகத் தன்னால் அழிவடைய வேண்டாம் என்று அச்சுறுத்துகிறாள். அதற்கு அனுமனோ ஊரைக் காணாமல் திரும்ப இயலாது என்கிறான். இலங்காதேவி சிந்தனை வயப்படுகிறாள். ''வானரன் அல்லன். எமனும் கண்டு அஞ்சும் வஞ்சம் கொண்டோன். சிவன் போல் சிரிக்கிறான். யார் கொல் இவன்?'' என்று எண்ணியவாறு அவள் அவன்மேல் ஒரு சூலத்தை எறிவதற்கு முன் 'வெல்ல வல்லாய் எனில் வெல்க. இல்லையெனில் கோபுர வாயில் வழியே ஏகுக' என்று சினத்துடன் மொழிகிறாள். அவள் எறிந்த சூலத்தை அனுமன் பிடித்து ஒடித்து எறிகிறான். பின்னர் இருவரும் போரிடு

---

*34 ஊர்தேடு-178* *35 ஊர்தேடு-179*

கிருர்கள். அனுமனிடம் தோற்கும் அவள் உயிர்ப்பிச்சை அளிக்க வேண்டுகிருள். இலங்கையைக் காத்து வருவதாகவும், ஒரு குரங்கால் நல்வாழ்வு கிட்டும் என்று தன்னிடம் நான்முகன் கூறியதாயும், அதன் பின்னர் இலங்கைக்கு அழிவு ஏற்படும் என்று தெரிந்து கொண்டதாகவும் அவள் அனுமனிடம் கூறுகிருள். மேலும் அவள்,

36''அன்னதே முடிந்த தைய வறம் வெல்லும் பாவம் தோற்கும்
என்னுமீ தியம்ப வேண்டுந் தகையதோ வினிமற் றுன்னல்
உன்னிய வெல்லா முற்று முனக்குமுற் ருததுண்டோ
பொன்னகர் புகுதி யென்னுப் புகழ்ந்தவ ளிறைஞ்சி''ப்

போகிருள்.

அனுமன் அவ்வூரில் நுழைவதால் ஏற்படப்போகும் மாற்றத்தைக் கவிஞர் 37 ''சீரிய பாலின் வேலைச் சிறுபிரை தெறித்த''தோடு உவமிக்கிருர்.

சூரியனுடைய ஒளி வேண்டாமலே இரவிலும் ஒளிரும் நகர் வழியே தேவியைத் தேடிச் செல்கிருன். அரக்கியர் செல்வச் செழிப்பால் காம மயக்கத்தில் ஈடுபட்டுக் கிடக்கிருர்கள். பல இடங்களையும் கண்டு வரும் அனுமன் கும்பகர்ணனை நோக்குகிருன். கலக்கமில்லாமல் அவன் விடும் மூச்சுக் காற்று அனுமனை மேலே செல்லவொட்டாமல் தடுக்கிறதாம்! அனுமனே, மூச்சுக் காற்ருல் அவன் மூக்கினுள் நுழையக் கூசியவனுய் அப்பாற் குதித்துச் செல்கிருன். அனுமன் முதலில் அவன்தான் இராவணனே என்று நினைத்துக் கொல்ல முற்பட்டு இராவணன் அல்லன் என்பதைத் தெளிந்து சினம் தணிகிருன். இதனைக் கம்பர்,

38''......................முனிவெனும் வடவை வெங்கனலை
அறிவெனும் பெரும்பரவையம் புனலிஞ லவித்தான்''

என்று கூறுகிருர்.

---

36 ஊர்தேடு-190 37 ஊர்தேடு-191
38 சுந்தர-ஊர்தேடு-226

இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகனுன அனுமன் அரக்கரின் மாய வாழ்வு அழியுங் காலம் நெருங்கி விட்டது என்று அறிந்து அப்பாற் செல்கிருன். அணுவிலும், மேருமலையிலும் கரந்து விளங்கும் ஆழியான்போல எல்லா விடங்களிலும் நுழைந்து விரைகிருன். தருமமே உருவான புண்ணியன் வீடணன் உறையும் மாளிகைக்கு வருகிருன். அவனை நல்லன் என்று கருதி மேற்செல்கிருன். இந்திரனை வென்ற இந்திரசித்து என்ற மேகநாதனைக் கண்டு அரக்கனே முருகனே என்று லியப்படைகிருன். அவனேடு போர் புரிய இராம இலக்குவர் உள்ளனர் என்று நினைக்கிருன். தந்தையின் வாழ்விற்கு மகனின் துணை சிறந்து நிற்பதை மனக்கண்ணுல் கண்டவாறு அவனை வெல்ல மூவர் தவிர வேறு யாரால் இயலும் என்று வியந்து செல்கிருன்.

# 10. [39] இராகவன் கழலெனப் புகழோன்

இராகவன் கழலெனப் போற்றப்படும் அனுமன் இராவ ணனின் மக்கள் அக்கன், அதிகாயன் வாழ்விடங்களைக் கடந்து செல்லும்போது அகழியைத் தன்னுல் கடக்க முடியுமோ என்று வியப்பு மேலிடுகிறதாம்! அதனையும் எளிதில் கடந்து அனைவரும் துயிலும் யாமத்தில் தான் தனியனுய்த் தேவியைத் தேடி அலைகிருன். இராவணனை நினைத்து அரக்கியர் மயங்கு கிருர்களாம். மயன் மகள் மண்டோதரியின் தனி மாடத்தை அணுகுகிருன். தென்றலும் அஞ்சி இராவணன் பணிக்கு ஏற்ற முறையில் உலவும் அவ்விடத்தில் தெய்வப் பெண்டிர் அடிவருடத் துயில் கொள்ளும் மண்டோதரியைச் சீதையோ என்று முதலில் நினைத்துத் துன்புறுகிருன்.

[40] "கற்பு நீங்கிய கனங்குழை யிவளெனிற் காகுத்தன் புகழோடும்
பொற்பும் யானுமிவ் விலங்கையு மரக்கரும் பொன்றுதும் இன்று"

என்று புலம்புகிருன். மேலும் உற்று நோக்கி மனித உரு விற்கு மாறுபட்டுத் தோன்றுபவள் சீதையல்லள் எனத்

39 சுந்தர-ஊர்தேடு-239 40 சுந்தர-ஊர்தேடு-295

தெளிந்து மன அமைதி அடைகிறான். கற்பிற் சிறந்த பெண்டிற்குரிய இலக்கணங்கள் பொருந்திய அவள் கருங் குழல் சோர, வாய்மொழி குளறத் தோன்றுகிறாள். அவளுக்கும் அந்நகருக்கும் கேடு விரைவில் வரும் என்ற எண்ணத்துடன் அகல்கிறான். அனுமனின் கூர்த்த மதியினை உணர முடிகிறது.

பின்னர் இராவணனின் கொற்ற மாளிகையினுள் நுழைகிறான். அவன் துன்பத்தை முன்னரே காட்டும் தீக்குறிகள் தோன்றுகின்றன. [41]''நூற்பெ ருங்கட லுணங்கிய கேள்வியன்'' ஆன அனுமன் வயிரங்கள் பதிக்கப்பட்ட வெண் மலர்ப் பள்ளியில் துயில்கொள்ளும் இலங்கை வேந்தனை நோக்குகிறான். பொன்மயமான மேருவில் பள்ளி கொள்ளும் நரசிம்மம் போலப் பத்துத் தலைகளையும், இருபது கைகளையும் பள்ளியில் கிடத்திக் கண் வளர்கிறான். ஆயிரம் தெய்வப் பெண்டிர் இருபுறம் நின்று கவரி வீசுகிறார்கள். திசை யானைகளின் மருப்புக்கள் ஒடிந்த நிலையில் மார்பில் விளங்கச் சந்தன மணம் கமழக் காமவெங்கனல் உடலைச்சுட, மனம் முதலிய கரணங்கள் விலகி ஓடப் பாம்புகள் நீங்கிய புற்றுப் போல நைகின்ற நெஞ்சோடு அமளியில் இராவணன் கிடக்கிறானும்!

[42]''காவியங் கண்ணி தன்பாற் கண்ணிய காத னீரின்
ஆவியை யுயிர்ப்பென் றேதுமம்மியிட் டரைக்கின்றான்''

என்பார் கம்பர். அவனைக் கண்ட அனுமன் அடைந்த சீற்றத்தினை ஆசிரியர்,

[43]கண்டனன் காண்ட லோடுங் கருத்தின்முன்
காலச் செந்தீ
விண்டன கண்கள் கீண்டு வெடித்தன கீழும் மேலும்''

என்று கூறுகிறார்.

---

41 சுந்தர-ஊர்தேடு-301 42 சுந்தர-ஊர்தேடு-308
43 சுந்தர-ஊர்தேடு-313

இராவணனுடைய முடியினைத் தாளினல் உதைந்துப் பத்துத் தலைகளை உடைத்து எறியவில்லை என்றால் தன் ஆண்மை என்னும்? இராமன் பொருட்டுச் செல்லும்பணி தான் என்ன பயன்பெறும்? அனுமனின் சிந்தனை ஓட்டம் இவ்வாறு செல்கிறது. அளவிறந்த சினத்தால் எயிறு கடித்து இரு கைகள் பிசைந்த நிலையில் செய்வது அறியாது அனுமன் நிற்கிறுன். இராமபிரான் ஏவிய பணியன்றிப் பிறசெயலில் ஈடுபடுவது முறையாகாது எனத் தெளிகிறுன். காலம் வரும் வரைக் கரை கடவாக் கடல்போல அடங்கி நிற்கிறுன். இராமன் செய்யவேண்டிய அடுதொழிலை ஒரு குரங்கு செய்தது என்று உலகோர் பழித்துக் கூறுவரே! இராவணன் காம மயக்கத்தில் கிடப்பதிலிருந்து தேவியின் கற்பினுக்குக் கேடில்லை எனத் தெளிந்து மேற்செல்கிறுன்.

''சீதையை எங்கும் கண்டிலனே! ஒருவேளை இராவணன் கொன்று தின்று விட்டானே? தேவியைச் சிறை செய்த இடம் இலங்கைக்கு அப்புறத்ததோ? இராமனிடம் போய் என்ன பதில் கூறுவேன்? இறப்பதைத் தவிர வாழ்வதால் பயன் உண்டோ? நல்வினை எனக்கு இல்லைபோலும். எழுநூறு யோசனை தூரம் பரவியுள்ள இலங்கையில் இராமனின் உயிரினை இதுவரை என்றால் காணமுடியவில்லையே. கற்களையும் சிதைக்கவல்ல என் கைகளால் இராவணனைக் குத்திச் சீதை இருக்கும் இடத்தை அறிவேனு? அவன் சொல்ல மறுத்தால் அவனையும் இலங்கையையும் எரியிட்டுப் பொசுக்கு வேனே? தேவர்களோ இராவணனுக்கு அஞ்சி ஒன்றும் உரையார். சம்பாதி அன்று சொன்ன சொல் பொய்யோ? இராவணனை அழித்த பிறகு என்னையும் மாய்த்துக் கொள்வேன். இதுவே செய்யத்தக்க சிறந்த செயல்'' என்று பலவாறு எண்ணி அனுமன் மலர்ச் சோலையாம் அசோகவனத்தைக் காண்கிறுன்.

# 11. [44]"இராகவன் புகழெனு நலத்தான்

அருகில் உள்ள சோலையிலும் தேவியைக் காணமுடிய வில்லை என்றால் இலங்கையைப் பெயர்த்து எடுத்துத் திரிகூட மலையில் எறிந்து உயிர் துறக்கவேண்டுமென்ற நினைவுடன் அனுமன் செல்லும்பொழுது தேவர்கள் பூமாரி பொழி கிறார்கள்.

[45]"வன்ம ருங்குல்வா ளரக்கியர் நெருக்கவங் கிருந்தாள்
கன்ம ருங்கெழுந் தென்றுமோர் துளிவரக் காணு
நன்ம ருந்துபோ னலனற வுணங்கிய நங்கை"யினைக்

காண்கிறான். துயில் நீங்கிய அரக்கியர் தேவியைச் சூழ்ந்து அச்சுறுத்தும் நிலையில் காவல் புரிகிறார்கள். அரக்கியரின் நெருப்பு உமிழும் கண்களைக் கண்டு தேவியும் வாடுகிறாள். ஒரு மரக் கிளையில் இருந்து அனுமன் அரக்கியர் செயலையும் சீதையின் நிலையினையும் நோக்குகிறான்.

[46]"தொடற்கரு மரக்கியர் காவல் சுற்றுளாள்
மடக்கொடி சீதையா மாத ரேகொலாம்
கடற்றுணை நெடியதன் கண்ணி னீர்ப்பெருஞ்
தடத்திடை யிருந்ததோ ரன்ன தன்மையாள்"

அனுமன் கண்ட சீதை நிலை இதுவாகும். தேவியைக் கண்ட அனுமன் அளவிறந்த மகிழ்ச்சி உறுகிறான். தேவியைக் கண்டதால் அறமும் அழியவில்லை, தனக்கும் அழிவில்லை என்று எண்ணி ஆடுகிறான்; பாடுகிறான்; ஆண்டும் ஈண்டும் ஓடுகிறான். உவகைத் தேனுண்டு உலாவுகிறான்!

---

44 சுந்தர-ஊர்தேடு-228 45 சுந்தர-காட்சிப்-332
46 சுந்தர-காட்சிப்-393

அறத்தின் நாயகன் தன்னிடம் கூறிய உரையோடு சிறிதும் மாறுபடா நிலையில் தோன்றும் சீதையினைக் கண்கள் களிகூர அனுமன் காண்கிறுன்.

[47] ''கள்ள வாள் அரக்கன் கமலக்கண்ணனுர் உள்ளுறை உயிரினை ஒளித்து வைத்த விதம்தான் என்னே'' என்று அனுமன் நகைக்கிறுன். இராமபிரான் அரவின் நீங்கிய தேவனே! சீதை அக்கமலச் செல்வியே! அனுமனின் ஞானக்கண் காணும் காட்சி ஈதாம். சீதையின் அவலத் தோற்றத்தைக் கண்டு மனம் நெகிழ்ந்து புலம்புகிறுன்.

''மாசுண்ட மணிபோல, சூரியன் முன் சந்திரன் போல ஒளி மங்கித் தேவி தோன்றுகிறுளே! காசுண்ட கூந்தலாளின் கற்பும் காவலும் ஏசுண்டதில்லே. அறத்திற்கு ஈறு உண்டோ? இந்நிலேயில் இராகவனின் பொற்புயத்தைப் போற்றுவேனு? மங்கையர் திலகத்தின் மனப் பண்பினே ஏத்துவேனு? அரசில் மேம்பட்ட சனகர் குலத்தைப் புகழ்வேனு? தேவரோ தெய்வ வேதியரோ பிழை செய்தனரோ? இல்லேயே. எம்பிராற்கு அரிய செயல் ஒன்றுண்டோ? எல்லாம் இனிதே முடியும். என் அடிமைத் தொழிலும் சிறக்கும். தேவியின் கற்பு நிலே பிறழ்ந்திருக்கும் என்ருல் இராமனின் சினம் என்னும் கடல் பொங்கி உலகை அழித்திருக்காதோ? உலகங்கள் நீடூழி வாழட்டும். மங்கையின் தவத்தை நோக்கும்போது, கனலில் நின்றும், நீரில் மூழ்கியும், உண்டி சுருங்கியும் நோற்பவரின் தவம் என்ன ஆற்றலே உடையது? மங்கையர் குலமே இவளால் வாழ்வு பெற்றதே. இத் தையலின் தவ நிலேயினேக் கண்களால் காண இராமன் நோற்றிலன் போலும்.

[48] ''தருமமே காத்ததோ சனக னல்வினேக்
கருமமே காத்ததோ கற்பின் காவலோ
அருமையே யருமையே யாரி தாற்றுவார்
ஒருமையே யெம்மனேர்க் குரைக்கற் பாலதோ?''

---

47 சுந்தர-காட்சிப்-395    48 சுந்தர-காட்சிப்-404

என்று அனுமன் பலவாறு மொழிந்து மகிழ்ச்சியில் திளைத்து மரக்கிளையில் மறைந்து நோக்கும்போது இராவணன் அங்கு வருகிறான்.

# 12. [49] அஞ்சனை சிறுவன்

இராவணனின் வருகையையும், சீதையின் நிலையினையும் நோக்கி, இராமன் திருவடியை வாழ்த்தி, இனி நடப்பதைக் காணலாம் என்று நினைத்து மரக்கிளையில் அஞ்சனை சிறுவன் அமர்கிறான்.

சீதாதேவியின் நிலை குறித்துக் கம்பர்,
[50]''காய்சின வுழுவை தின்னிய வந்த கலையிளம்
பிணையெனக் கரைந்தாள்'' என்கிறார்.

ஆசையால் அழிகின்றானையும், கூசுகின்ற உளத்தாளையும் கண்ட அனுமன் இனி என்ன நடக்குமோ என்று ஊசலாடும் உளத்தானாகத் தோன்றுகிறான்.

[51]''வாழி சானகி வாழியி ராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி நல்லற மென்றென்று வாழ்த்தினான்
ஊழி தோறு முயர்வுறுஞ் சீர்த்தியான்''

இவ்வாறு அனுமனின் நா பலபடியாக வாழ்த்துகிறதாம்!

இராவணன் சீதையிடம் தாழ்ந்து கூறுகிறான். ''தேவி! காமநோய் என்னைக் கொன்று தின்றபின் சேர விரும்புகிறாயோ? திலகமே! அனங்கன் தரும் அல்லலை என்னென்பேன்? என் செல்வத்தினையும் இகழ்கிறாய். இங்கிருந்து தப்பி இராமனோடு வாழும் வாழ்வினையா நினைந்தனை? பிரமன் படைப்பில் உனக்கு இடைதான் இல்லையென்றால், மனதில் அருளுமா இல்லை? இளமைப் பருவத்தில் இன்பம்

---

49 சுந்தர-நிந்தனைப்-426 50 சுந்தர-நிந்தனைப்-427
51 சுந்தர-நிந்தனைப்-429

துய்க்காமல் முதுமைப் பருவத்திலா இன்பம் துய்க்க எண்ணு வாய்? நான் இறப்பின் உனக்கு என்னை ஒத்த துணைவர் யார்? கருணைக்குச் சனகன் குலத்தில் பஞ்சம் வந்ததேன்? இராமனோ இறந்தான். விதி தந்த செல்வத்தை நீ இகழ லாமோ?'' என்று இராவணன் காம மயக்கத்தில் புலம்பு கிறான். மேலும் தலையின் மீது கை குவித்துத் தரையில் வீழ்ந்து வணங்குகிறான்.

சீதை கடுங் கோபத்துடன் இராவணனை ஒரு துரும்பு என்றெண்ணி வெகுண்டு உரைக்கிறாள்.

'அரக்கனே! கல்லொடு ஒத்த மனம் மங்கையர்க்கு உண்டாவதற்கு அவர்தம் கற்பன்றோ காரணம்! ஆரியனின் பகழி மேருவையும், ஏன் விண்ணையும் துளைக்க வல்லதே! இதனை நன்கு உணர்ந்த நீ தலை பத்தும் இழந்து வருந்து வாயோ? மாயமானை ஏவி, நாயகனைப் பிரித்துத் துறவி வேடங்கொண்டு வஞ்சனையால் கவர்ந்து வந்த நீ என் துணைவனை நேரில் எதிர்க்கத் துணிவையோ? சடாயுவிடம் போர்புரிந்து மயங்கினை. என் நாயகன் முன் உன்னால் எதிர்த்து நிற்க முடியாது. விளக்கின் முன் இருள் நிற்குமோ?

'வள்ளலின் கணை முன் உன் வரபலம் என்னாகும்? மலை எடுத்த நீ சிலை எடுத்த இலக்குவன் முன் வராததன் காரணம் என்னவோ? என் துணைவரின் சீற்றத்தால் நீங்கள் அனைவரும் அழிவீர்கள். உன்னை வென்றான் கார்த்த வீரியார்ச்சுனன். அவனை வென்றான் பரசுராமன். அவனை வென்ற என் நாயகன் ஆற்றலை இப்பொழுதாவது உணர்கிறாயா? வரபலத் தால் பெற்ற செல்வத்தினைப் பிறன்மனை நயப்பதின் மூலம் இழப்பாய்போலும். இருவர் என்று இகழ்கிறாயே. ஒருவரால் உலகம் ஊழிக் காலத்தில் அழிவதை உணராயோ?

[52]கடிக்கும் வாளரவுங் கேட்கும் மந்திரங்
களிக்கின் றேயை
அடுக்குமீ தடாதென் றுன்ற வேதுவோ டறிவு காட்டி
இடிக்குந ரில்லை நீயே யெண்ணிய தெண்ணி யுன்னை
முடிக்கின்ற போது முன்னின் முடிவின்றி
முடிவதுண்டோ?''

இவ்வாறு தன்னை இராமன் தேவி பழித்துரைத்ததைக் கேட்ட இராவணன் முதலில் கடுங்கோபத்துடன் சீதையைக் கொன்று தின்ன விரைகிறான். அதனை மரக்கிளையில் மறைந்து காணும் அனுமன் 'இராவணன் சீதையைத் தொடு வதற்குள் அவனைத் துகைத்து உழக்கித் தேவியை மீட்க வேண்டும்' என நினைத்துக் கைகளைப் பிசைந்து கொள்கிறான்.

ஆனால் இராவணனே சீற்றம் தணிந்து மீண்டும் காம மயக்கத்தில் பிதற்ற ஆரம்பிக்கிறான். தன்னால் செய்வதற்கரிய செயல் ஒன்றுமில்லை என்றும், செய்த செயல்கள் யாவும் விளையாட்டாகச் செய்யப்பட்டன என்றும், இராமனைக் கொன்று தேவியைக் கவர்ந்து வருதல் தனக்கு எளிய செயலே என்றும் இராவணன் சீதையிடம் கூறுகிறான். மேலும் தான் அவ்வாறு செய்யாததற்குக் காரணம் அவள் இறந்துபடு வாளே என்ற அச்சத்தினாலே என்று விளக்குகிறான். தேவரே எதிர்க்கத் துணியாதபோது மனிதர் எம்மாத்திரம்? உலகத்தை ஆளவும், மானிடரை ஏவலாளராக ஆக்கவும் தன்னால் முடியும் என்கிறான். சீதையைத் தனக்குத் தந்த வர்க்கு இடுக்கண் விளைவிக்க விரும்பவில்லையாம். பரதனோ, சனகனோ தன்னை எதிர்த்தால் அழிவர் என்றும், இரு திங்கள் கடந்தால் பொறுமை இழந்து தேவி உயிரைக் குடிப்பதா கவும் சூளுரைத்து அரக்கியர்க்கு ஆணையிட்ட வண்ணம் அவ்விடம் விட்டு அகல்கிறான். சீதையின் வருத்தத்தினை வீடணன் மகள் திரிசடை போக்கித் தான்கண்ட கனவினையும் கூறி அரக்கர் குல அழிவினை முன்னரே தெரிவிக்கிறாள். அரக்கியரும் அவ்வுரை கேட்டு வாளா இருக்கிறார்கள்.

---

52 சுந்தர-நிந்தனைப்-465

# 13. [53] உத்தமன்

தேவியைக் காண வேண்டும் என்று விழைந்த இராம தூதன் மந்திரத்தால் அரக்கியரைத் துயில் கொள்ளச் செய்கிறான். சீதையோ அளவிறந்த துயரத்தால் உயிர்விடத் துணிந்து ஒரு மாதவிப் பொதும்பருக்கு விரைகிறாள். தேவியின் உளநிலையினைக் குறிப்பால் உணர்ந்த அனுமன், தேவியின் மெய் தீண்டக் கூசியவனாய்,

[54] ''அண்டர் நாயக னருடூதன் யான்'' என்று கூறிய வண்ணம் அவள் முன் வந்து வணங்குகிறான். அரக்கர் இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பது இராமன் தேவியிருக்கும் இடத்தை அறியாததனாலேதான் என்று கூறி இராமபிரான் அளித்த மோதிரத்தைப் பணிவன்போடு சீதையிடம் கொடுத்துத் தாழ்ந்து நிற்கிறான்.

'இக்குரங்கு உருவில் தோன்றும் இவன் யார்? அரக்கனோ? அல்லன் அல்லன். இருடியோ? இவன் யாராய் இருப்பினும் தூயவனே! இவன் அரக்கனாகத்தான் இருக்கட்டுமே. என் நாயகனின் திருநாமத்தைக் கூறி என் உயிரைக் காத்தவன் அல்லவா! இதைக் காட்டிலும் எனக்குச் செய்யும் உதவி பிறிதுண்டோ?' என்று சீதை பலவாறு எண்ணி அனுமனிடமே யாரென வினவுகிறாள்.

அனுமன் தேவியை வணங்கித் தான் யார் என்பதையும் இராமன் மூலம் சுக்கிரீவன் தன் ஆட்சியினைப் பெற்றதையும், வாலி இராமனின் கணைக்குப் பலியானதையும், வந்த காரணத்தையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறான். தேவியைத் தேடி வானரர் பலவிடங்களிலும் சென்றுள்ளனர். தென்திசைக்கண் தான் அங்கதன் சாம்பன் முதலிய வானர

---

53 சுந்தர-உருக்காட்டுப்-558
54 சுந்தர-உருக்காட்டுப்-510

வீரர்களுடன் வந்து, கடலைத் தாண்டி இலங்கையில் தேடிக் கண்ட விபரத்தையும் அனுமன் கூறுகிறான். அரக்கனால் கவரப்பட்டுச் சென்ற காலையில் தேவி விட்டுச் சென்ற அணி கலன்களை இராமனிடம் காட்டிய தன்னிடம் சில செய்தி களையும் கூறியதாகத் தெரிவிக்கிறான். அணிகலன்களே இராமன் உயிரைக் காத்தன என்று சொல்லவும் வேண்டுமோ? நாயகனைப் பற்றித் தேவி உரைக்குமாறு வேண்ட அனுமனும் அறத்தின் நாயகனின் திருமேனி அழகில் ஈடுபட்டவன் ஆதலின் அழகாக விளம்புகிறான். இராமனைப் பிரிந்ததால் ஏற்பட்ட துயரம் வாட்டச் சீதை அனலிடைப்பட்ட மெழுகுபோல உருகித் தளர்கிறாள். இராமன் தன்னிடம் தேவிக்குக் கூறுமாறு உரைத்த செய்திகளை அனுமன் அவளிடம் தெரிவிக்கிறான்.

''காட்டு வழி கடத்தற்கரிது. போய்வரும் நாளோ சிலவாம். அதுவரையில் தாயர்க்குப் பணி செய்து இருப் பாய்'' என்று உன் நாயகன் உன்னிடம் தெரிவித்தானும். நீயோ கோபங்கொண்டு உடனே அவனுடன் புறப்பட்டு வந்தாயாம்.

'அறத்தின் நாயகன் தனக்குரிய செல்வத்தைத் துறந்து காடேகிய நாளில் நகர் எல்லை கடப்பதற்குள் கான் யாண் டையது என்று வினவினையாம்.'

காட்டிலிருந்து திரும்பிச் செல்லும் தேரோட்டி சுமந் திரனிடம், கிளிகள், நாகணவாய்ப் பறவைகளைக் காக்கும் விதத்தை ஊர்மிளை போன்றோரிடம் கூறுமாறு தெரிவித்தா யாம்!

இராமன் தந்த மோதிரத்தைக் கண்டும், அவன் உரைத்த செய்தியைக் கேட்டும் சீதைஅடைந்த மகிழ்ச்சியினை

55 ''இறந்தவர் பிறந்தபய னெய்தினர்கொ லென்கோ
மறந்தவ ரறிந்துணர்வு வந்தனர்கொ லென்கோ
துறந்தவுயிர் வந்திடை தொடர்ந்ததுகொ லென்கோ
திறந்தெரிவ தென்னைகொலி நன்னுதலி செய்கை''

என்று தன் இயலாமையைத் தெரிவிக்கிறார்!

இழந்த மணியைப் பெற்ற நாகம் போலவும், இழந்த செல்வத்தைப் பெற்றவர் போலவும், குழந்தையை உயிர்த்த மலடிபோலவும் சீதை மகிழ்ந்தாள் என்கிறார்.

தேவி மிக்க மகிழ்ச்சியுடன் அனுமனை நோக்கி, 'உத்தம! என் உயிர் தந்தவனே! ஊழி முதல்வனின் தூதனாய் வந்தவனே! உனக்கு நான் செய்யும் கைம்மாறுதான் என்னே! அத்தனே! இருமையும் எனக்குத்தந்த அருளின் வாழ்வே!'

56 ''பாழியம் பணைத்தோள்வீர துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ள லேயான் மறுவிலா மனத்த ளென்னின்
ஊழியோர் பகலாயோதும் யாண்டெலா முலகமேழும்
ஏழும்வீவுற்ற ஞான்று மின்றென விருத்தீ''

என்று அனுமனை நாயகன் தேவி நாவார வாழ்த்துகிறாள். பின்னர் இராமபிரானைப் பற்றிய செய்திகள் அனைத்தையும் அவள் அனுமன் வாயிலாகக் கேட்டு அறிகிறாள். இராமனின் நைந்த மனநிலையினை அறிந்து மனம் பெரிதும் வருந்துகிறாள்.

கடலைக் கடந்தது எவ்வாறு என்று வினவிய தேவியை நோக்கி, இராமபிரானின் திருவடிகளை வணங்கும் ஞானியர் மாயைக் கடலை நீந்தவல்லவர் என்பதுபோலத் தானும் கருங் கடலைக் காலினால் தாண்டி வந்ததாகக் கூறுகிறான். சிறிய

55 சுந்தர-உருக்காட்டுப்-552
56 சுந்தர-உருக்காட்டுப்-560

வடிவத்துடன் கடலைக் கடந்து வந்தது எவ்வாறு என்று வினவிய தேவி முன் அனுமன் தொழுத கையினனாய், நிமிர்ந்தால் வான்முகடு தலையினைத் தாக்கும் என்று வளைந்த வடிவத்தை உடையவனாய்த் தன்னை அவள் காணுமாறு பணிவன்புடன் தாழ்ந்து நிற்கிறான். அவ்வாறு நின்றவளவில் அவன் உடலில் உள்ள மயிர்களில் மின்மினிபோல விண்மீன்கள் மிடைந்து தோன்றுகின்றன.

57''வஞ்சியம் மருங்குலம் மறுவில் கற்பினாள்
கஞ்சமும் புரைவன கழலுங் கண்டிலாள்
துஞ்சின ரரக்கரென் றுவக்குஞ் சூழ்ச்சியாள்
அஞ்சினெ னிவ்வுரு வடங்குவாய்''

என்று வேண்டியவுடன் அனுமன் தன் பேருருவைச் சுருக்கிக் கொள்கிறான்.

அனுமனின் ஆற்றலை நோக்கிய சீதை, கடல் தாண்டியது அவனுக்கு ஒரு பெருஞ் செயலாகாது என்று புகழ்கிறாள். ஆழியான் புகழும் அருளும் அழிவின்றி ஊழி பலவும் நின்று நிலவ அனுமன் உளன் என்று போற்றுகிறாள். அறிவும், உருவும், ஆற்றலும், ஐம்புலச் செறிவும், செயலும், மனத் தெளிவும், நிரம்பப் பெற்றவன் என்றும், அனுமனைக் காட்டிலும் உயர்ந்தோர் யாரெனவும் பாராட்டுகிறாள்.

'உத்தம! உன் துணை அண்ணலுக்கு வாய்த்தபோது அவர்க்கு அரிய செயல் உண்டோ? இனிமேல் நான் இறப்பினும் குற்றமில்லை. ஆம்! அரக்கரை வேர் அறுத்தேன். அரக்கர் காவலில் இருந்து மீண்டேன். புகழே பெறுவேன். பழியைத் தீண்டேன்' என்று புகழ்கிறாள்.

தேவியின் புகழ்மொழி கேட்டு அனுமன் நாணமடைந்து நிற்கிறான். மணலினும் பலவாய் விளங்கும் வானரர்களில் தான் ஒருவனாக வந்ததையும், அவ்வானரர் ஒரு கை அள்ளிக்

57 சுந்தர-உருக்காட்டுப் 594

குடிக்கவும் போதாது அக்கடல் என்றும், இராமனின் அம்பு போல அவர்கள் செயல்புரிவர் என்றும் கூறுகிறான்.

# 14. [58] மெய்ம்மை தொடர்ந்தோன்

அண்டர் நாயகனின் ஆவியனையாளைக் கொண்டு செல்வதே தன் கருமமாகும் என அனுமன் எண்ணுகிறான். தனது வேண்டுகோள் தேவிக்குச் சினத்தை விளைவிக்கலாம் என்றும் ஊகிக்கிறான். சீதையிடம் தான் கூறப்போவதைப் பொறுமையுடன் கேட்டருள வேண்டும் என்று பணிவன்புடன் தெரிவிக்கிறான்.

''தேவி! இராவணன் நின்னைக் கொன்றுவிட்டால் அவனை வெல்லும் செயல் என்ன பயன் தரும்? நாயகன் முன் உன்னைக் காட்டித் தாழ்வதே அடியவன் செயலாக வேண்டும். என்னுடைய மெல்லிய மயிர் படர்ந்த தோளிலே அமர்ந்து துன்பம் நீங்கிய நிலையில் இருப்பாயாக. வழியில் எங்கும் நில்லாது வள்ளல் முன் குதிப்பேன்! வழியில் தடுப்பவர் உயிர் பிரியும். இலங்கையோடு செல்ல வேண்டுமெனினும் அதனையும் பெயர்த்து எடுக்க வல்லேன். உன்னைக் கொண்டு செல்லாமல் அரக்கனின் சிறையில் இருக்கிறாள் என்று நான் அழகனிடம் சொல்வேனேயாயின் என் அடிமைத் தொழில் என்னும்? இலங்கையை எரியூட்டி அரக்கரோடு இராவணனையும் அழிப்பாய் என்று ஆணையிடின் உடன் செய்து முடிப்பேன். ஆனால் இச்செயலை இராமபிரான் செய்து முடிப்பதே நன்று. அருந்ததி அனையாய்! அருள் கூர்ந்து என் தோளில் அமர்வாய்'' என்று பணிவுடன் வேண்டி நிற்கிறான்.

---

58 சுந்தர-சூளாமணிப்-688

59 ' தாயின் முன்னிய கன்றனையானை ' நோக்கி, 'இவன் சொல்லிய வண்ணம் செய்ய வல்லான் ' என்பதனை எண்ணிய சீதை மறுமொழியாகச் சிலவற்றைக் கூறுகிறாள்.

'' அனும ! உன் திறத்திற்கு ஏற்றன கூறினாய். ஆனால் பேதை நெஞ்சம் உன் செயலைத் தக்கதன்று என்று எண்ணுகிறது. என்னைக்கொண்டு செல்லும் வேளையில் அரக்கர் எதிர்த்தால் அவரோடு போரிடுவாயா ? என்னைக் காப்பதில் முனைவாயா ? தனிமையோய் ! சாலவும் தடுமாறுவாயோ? உன் செயல் என் நாயகனின் வில்லாற்றலுக்கு மாசு கற்பிக்குமே. சமைத்த உணவினைப் பிறர் அறியாவாறு எடுத்துச் செல்லும் நாய்களின் வஞ்சனைச் செயலை நீயும் நினைக்கலாமோ ? தேவர்கள் வியந்து நோக்க, என் நாயகர் போர் புரியும் வேளையில், என்னைத் தவறாக நோக்கிய இராவணனின் கண்களைக் காகங்கள் கொத்தித் தின்னும் காட்சியினைக் காணும் போதே என் கண்கள் களிப்படையும். அரக்கனுக்குத் துணை நின்ற அரக்கியர் நாண் அற்றுப் புலம்பும் போதே என் நாணம் சிறந்து தோன்றும் ! அரக்கர் அழிவன்றோ உலகிற்கு என் கற்பு நிலையைக் காட்டும் சான்றாகும். எனக்குக் கொடுமை செய்தோரைச் சொல்லினாலேயே சுடுவேன். அது தூயவன் வில்லின் ஆற்றலுக்கு மாசென்று வீசினேன் ! மெய்ம்மையோய் ! ஐம்பொறி புலனடக்கம் உடைய உன்னையும் இவ்வுலகம் ஆண் எனக் கூறுமே ! என் நாயகனின் திருமேனி தவிரப் பிறர் மேனியினைத் தீண்டுவேனோ ? இராவணன் என்னைத் தீண்டியிருப்பின் மாண்டிருப்பனே ! நிலத்தைக் கீண்டியே என்னைக் கொணர்ந்ததில் இருந்து அறியலாமே. மேலும் அவனுக்கு உண்டான சாபத்தைத் திரிசடை என்னிடம் கூறியுள்ளாள். நான் இருந்த இடத்தை விட்டுச் செல்வதில்லை என்று முடிவு செய்துள்ளேன். நாயகனின் திருமேனியை ஒத்திருக்கும் இப் பொய்கைக் கரையிலேயே இருப்பேன் '' என்று மறுமொழி பகர்கிறாள்.

---

59 சுந்தர-சூளாமணிப்-616

அனுமனின் மனதில் தோன்றிய கருத்தினைக் கவிஞர்,

60''நன்று நன்றிவ் வுலகுடை நாயகன்
தன்று ணைப்பெருந் தேவி தவத்தொழில்
என்று சிந்தை களித்துவந் தேத்தினன்
நின்றசங்கை யிடரொடு நீங்கினன்''

என்று கூறுவார்.

'தேவி! இராவணனால் இனி உலகுக்கு இடரில்லை. வள்ளலைப் பிரிந்து உறையும் நாட்களோ மிகக் குறைவு. ஐயனுக்கு யான் சொல்லும் செய்தியினைக் கூறி அருளுக' என்று வினவிய அனுமனை நோக்கிச் சீதை கூறுகிறாள்.

'நீதியோய்! இன்னும் ஒரு திங்கள் உயிரோடு இருப்பேன். மன்னன் ஆணை.

61''ஆரந் தாழ்திரு மார்பிற் கமைந்ததோர்
தாரந் தானல ளேனுந் தயாவெனும்
ஈரந் தான்மனத் தில்லையென் றுலுந்தன்
வீரங் காத்தலை வேண்டென்று வேண்டுவாய்''

காத்தற் தொழிலில் ஈடுபடும் இளையவற்கே என்னைக் காத்தல் கடமை என்று அவனுக்கு உணர்த்துவாய். ஒரு திங்கள் கழியுமானால் என் நாயகன் எனக்குக் கங்கையாற்றங்கரையிலேயே இறுதிக் கடனை நிறைவேற்றலாம்! மாமியர் மூவர்க்கும் என் இறுதி வணக்கத்தினைத் தெரிவித்தேன் என்று என் துணைவரிடம் கூறு. அவர் அருளின்மையால் கூற மறந்தால் நீயாவது அதனைக் கூறுவாய். 62''இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்'' என்று சொன்ன வார்த்தையினை அவர் திருச்செவியில் சாற்றுவாய். ஈண்டு நான் இறப்பினும் மீண்டும் பிறவி எடுத்து அவரையே

60 சுந்தர-சூளாமணிப்-632 61 சுந்தர-சூளாமணிப்-635
62 சுந்தர-சூளாமணிப்-639

சாரும் வண்ணம் எனக்கு வரமளிக்க வேண்டினுள் என விளம்புவாய். அவரோடு இருந்து வாழும் வாழ்வு பெற்றே னில்லை. அன்னையின் துன்பம் களைவதற்கும், பரதன் துயர் தீர்ப்பதற்கும் அவர் மனம் செல்லுமே ஒழிய என்னை நோக்கி இங்கு வர விரும்புமோ? என் தந்தையின் சுற்றத்தார்க்கும் என் வணக்கத்தை தெரிவித்துவிடு. என் நாயகனை அயோத் தியில் முடி சூட்டி ஆள வைக்கச் சுக்கிரீவனைப் பின் தொடர்ந்து போகச் சொல்' என்று இவ்வாறு வருத்தத் துடன் மொழிந்த தேவியை அனுமன் பலவாறு கூறித் தேற்றுகிருன்.

'தேவி! நீ இவண் இறப்பாய்! உன்னை மறந்து இராகவன் அயோத்தி சென்று முடிசூடுவான்! உனக்குக் கொடுமை செய்த இராவணன் இனிதே வாழ்வான்! அறநிலை நின்றவர் பொய்த்துப் போவார்! அப்படித்தானே! இவ்வார்த் தைக்கு இணையுண்டோ?! தாயே! ஏன் இவ்வாறெல்லாம் மனம் நொந்து பேசுகிருய்? உன்னை இவண் தவிக்கவிட்டு நாங்கள் அயோத்தி திரும்புவோமா? அரக்கரை அழித்து மாதவரைக் காப்பதாகக் கூறிய சொல் பொய்யோ? இராம னுல் காப்பாற்றப்படாமல் இங்கு நீ இறந்தால் அவன் வீரம் என்னும்? அரக்கரால் விளைந்த இடர் நீங்கித் தேவர் மகிழ் வதைக் காண வேண்டாமோ? அரக்கரின் குருதியோடு எழுகடல் நீரும் கலந்து ஒலிக்கக் கேட்பாய். அரக்கியரின் தாலிகள் பெருமலையாய் வாலியாலும் தாண்ட முடியாது உயரக் காண்பாய். அரம்பையர் ஆடிய அரக்கரின் அரங்கில் இனிக் குரங்குகள் ஆடக் காணலாம். இராமபிரான் இராவ ணனேடு உடற்றும் போரில் திசைக்கரிகள் அவன் தலைகளை இடறிச் செல்லுமே! செருக்களத்தில் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்துப் பேய்கள் நடனம் புரியுமே! அரக்கியர் அரக்க ரோடு குளித்த வாவியில் இனிக் குரங்குகள் தம் வால்களைப் பற்றிக்கொண்டு நீராடிக் களிப்பதைக் காணலாம். உன்னைப் பிரிந்த பிரிவு நோய் இராமபிரானை வாட்டுகிறதே. அவன் செல்லும் திசையில் உள்ள பூக்கள் தளிர்கள் போன்றவை அவ்வெம்மை பட்டுக் கரியுமே! யான் சொல்லியவை

அங்கை நெல்லிக்கனிபோல் மெய்யென விளங்கித் தோன்றுமே !

63''தீர்த்தனுங் கவிக்குலத் திறையுந் தேவிநின்
வார்த்தைகேட் டுவப்பதன் முன்னர் மாக்கடல்
தூர்த்தன விலங்கையைச் சூழ மாக்குரங்கு
ஆர்த்தது கேட்டுவந் திருத்தி யன்னைநீ''

நங்காய் ! என் தோளில் இராமபிரானும், அங்கதன் தோளில் இலக்குவனும் அமர்ந்து செருக்களம் செல்வதைக் காண்பாய். அப்பொழுதாவது உன் ஐயம் நீங்கட்டும். உன்னை இச்சிறையில் மீட்காமற் போவானுனல் இராமன் இராவணனே ! ஆம் ! இராவணன் இராமனே ! இவ்வாறு தானே இருவரும் மாறித் தோன்றுவர் !'

அனுமனின் சொற்களைக் கேட்ட சானகி துயர் நீங்கி அன்புடன் சில வார்த்தைகளைக் கூறுகிருள்.

'மெய்ம்மை தொடர்ந்தோய் ! அடாத செயல் புரிந்த காகாசுரன் நாயகன் கணைபட்டுப் பட்டபாட்டினை அவர்க்குத் தெரிவிப்பாய். இச் சூளாமணியினைப் பெரிய அடையாள மாகக் கொண்டு செல்வாய்' என்கிருள். அவனும் மகிழ்ச்சி யுடன் அதனைப்பெற்று ஆடையில் பொதிந்து அவளை மூன்று முறை வலம்வந்து வணங்கிச் செல்கிருன்.

# 15. [64]"எயிற்றிடைக்கோள் ஏனம் அனையான்

இனி வடக்குத் திசை நோக்கிச் செல்லலாம் என்று பேருருவத்துடன் பொழிலிடைக் கடிதாகச் செல்லும் அனுமன் சிறிது சிந்தனை வயப்பட்டவனுய் நிற்கிருன்.

---

63 சுந்தர-சூளாமணிப்-676
64 சுந்தர-பொழிலிறுத்த-702

'வள்ளல் இராமன் ஏவிய பணி இனிதே முடிந்தது. இத்துடன் என் பணி முடிந்ததென்று திரும்பினல் என் ஆண்மை என்ன பயன்பெறும்? இழிந்த அரக்கரை ஒறுத்து இலங்கையைப் பெயர்த்துக் கடலில் வீசித் தேவியை நாயகனின் திருவடியில் சேர்ப்பிக்கவில்லே என்ருல் என் அடிமைத் தொழில் எவ்வாறு முற்றுப்பெறும்? இராவணனே என் நெடு வாலால் பிணித்துச் சிறையிட்டேனு? அவனேப் போரில் வென்றேனு? ஒன்றும் செய்யவில்லேயே! இராவணன் காணும்போதே அவன் மனேவி மண்டோதரியின் மலர்க் கூந்தலேப்பற்றி அவளேச் சிறையில் அடைத்தேனு? அரக்கரை வலியப் போருக்கு அழைத்து என் வீரத்தைக் காட்டுவேன். இப்பெருஞ் சோலேயையும் அழிப்பேன். என்னே எதிர்க்கத் துணியும் அரக்கர் தலேவனின் பத்துத் தலேகளேயும் சிதறச் செய்வேன்'.

இவ்வாறு திட்டமிட்ட அனுமன் அழிவுச் செயலில் ஈடு படுகிருன். அசோகவனம் அனுமனின் கால்பட்டு அழிகிறது. பூமியை எயிற்றிடைக் கொண்டு மீண்ட வராக மூர்த்திபோல அனுமனின் தோற்றமும் செயல்களும் விளங்குகின்றன.

65''முடிந்தன பிளந்தன முரிந்தன நெரிந்த
மடிந்தன பொடிந்தன மறிந்தன முறிந்த
இடிந்தன தகர்ந்தன வெரிந்தன கரிந்த
ஒடிந்தன வொசிந்தன வுதிர்ந்த பிதிர்ந்த''

என்று அசோகவனம்பட்ட நிலேயினே விளக்கும் பகுதி படித்து இன்புறத்தக்கது.

அனுமனுல் வீசி எறியப்பட்ட மரங்கள் வானுலகில் சென்று வீழ்கின்றனவாம்! வேங்கை, மரா, கற்பகம், மா, சண்பகம், சந்தனம், போன்ற மரங்கள் அனுமனுல் எறியப் பட்ட மரங்களில் சிலவாம்! மதில்கள் மாடங்கள் எரி யுண்கின்றன. உலகமே அழியும்போது திருமால் பள்ளி

---

65 சுந்தர-பொழிலிறுத்த-703

கொள்ளும் ஆல் மாத்திரம் அழியாது நிற்பதுபோல அசோக வனத்தில் சீதை உள்ள இடத்தில் நிழல்தந்து நிற்கும் மரம் மட்டும் சேடுருமல் தோன்றுகிறதாம்! ஓரிரவு முழுவதும் இவ்வாறு அனுமன் அழித்துச் சிதைக்கிருன். தனித்து நிற்கும் அனுமனுக்குத் திருவிக்கிரம மூர்த்தியையும், உருத்திரமூர்த்தியையும், மந்திரமலையையும் உவமையாகச் சொல்லலாம்.

குரங்கு உருவில் தோன்றும் அனுமனை யாரென்று அரக்கியர் அச்சத்தால் சீதையை வினவுகிருர்கள். அரக்கரின் வஞ்சனைச் செயலால் சிறைப்பட்டதைச் சீதை கூறுகிருள். 'தீயவர் செயலைத் தீயவரே உணர்வர். அரக்கரின் மாயச் செயலைத் தூயவர் உணர்வரோ?' இவ்வாறு கூறிக்கொண்டிருக்கையில் அனுமனைக் கண்டு அரக்கியர் அஞ்சி வயிற்றில் அடித்துக்கொண்டு ஓடுகிருர்கள். அனுமன் ஒரு செய் குன்றினை எடுத்து மாடங்களின் மீது வீச அவை தரைமட்டமாகின்றன. அரக்கர் நடுங்குகிருர்கள். தீயவை செய்தார் பிழைப்பரோ?

அசோகவனத்தைக் காக்கும் பருவத்தேவர் அனுமனைக் கண்ட அச்சத்தால் சிறுநீரால் நனைந்த ஆடையுடன், வாய் குழறி, மெய்நடுங்கி இராவணன் இருப்பிடத்தை நாடி ஓடுகிருர்கள்!

அவர்கள் இலங்கை வேந்தனின் காலடியில் வீழ்ந்து 66 ''கரிபடு திசையி னிண்ட காவலா! காவல் ஆற்றேம் மலையினும் திண்ணிய தோளுடைய ஒரு குரங்கு மரங்களை முறித்து எறிவதால் சோலை எரியிடைப்பட்ட ஆடைபோல் அழிகிறது. காக்கவேண்டும் மன்னவர்'' என்று புலம்புகிருர்கள். இதற்குப் பதில் இராவணனின் புன்னகைதான்!

மேலும் அவர்கள் கூறுகிருர்கள். 'மன்ன! அக்குரங்கைச் சுமக்கும் ஆற்றல் பூமி எவ்வாறு பெற்றது என வியக்கிருேம்.

66 சுந்தர-பொழிலிறுத்த-750

அக்குரங்கு மூவருள் ஒருவனோ? அக்குரங்கைக் காணவர வேண்டுகிறோம்' என்று நடுநடுங்கிக் கூறுகிறார்கள். அப்பொழுது அனுமனின் ஆரவாரம் அண்டமும் பிளந்து விண்டதோ என்னும்படி எதிரொலிக்கிறது.

# 16. [67]எவரினும் அதிகம் உயர்ந்தான்

[68]''அருவரை முழையின் முட்டு மசனியி னிடிப்பு மாழி
வெருவரு முழக்கு மீசன் வில்லிறு மொலியு மென்னக்
குருமணி மகுடகோடி முடித்தலை குலுங்கும் வண்ணம்
இருபது செவியினூடு நுழைந்ததவ் வெழுந்த வோசை''

அனுமன் எழுப்பிய ஓசை எங்கும் எதிரொலிக்கிறது. இராவணன் கிங்கரர்களை நோக்கி அற்பக் குரங்கைக் கொல்லாமல், தப்பிச் சென்று விடாமல் மெல்லப் பற்றிவர ஆணையிடுகிறான். அவர்கள் அனுமனைப் பிடிக்கச் சூலம், வாள், முசலம், வேல், தோமரம், தண்டு, பிண்டிபாலம், போன்ற கருவிகளோடு செல்கிறார்கள். முரசு ஆர்க்கிறது. வீரக்கழல் ஒலிக்கிறது. நாணொலி எழுகிறது. சங்கொலி முழங்குகிறது. வீரரின் ஆரவாரம் கடல் ஒலியினும் விஞ்சிக் கேட்கிறது.

[69]''வரைகளை யிடறுமி னென்றால் மறிகடல் பருகுமி
னென்றால்
இரவியை விழவிடு மென்றா லெழுமழை பிழியுமி
னென்றால்
அரவின தரசினை யொன்றோ தரையினொ டரையுமி
னென்றால்
தரையினை யெடுமெடு மென்றா லொருவர தமைதல்
சமைந்தார்''

---

67 சுந்தர-கிங்கரர்வதைப்-775
68 சுந்தர-கிங்கரர்வதைப்-755
69 சுந்தர-கிங்கரர்வதைப்-771

அரக்கரின் ஆற்றல் அழகுறப் பேசப்படும் விதம்தான் என்னே !

அரக்கரின் ஆரவார ஒலியினை அனுமன் செவிப் புலத்தால் ஓர்ந்து, கதிரவனும் வெருவிடக் கயிலைமலை போல எதிர்த்து நிற்கிறான். பொழில் இறுத்த தன்செயல் வெற்றி அளித்ததைக் கண்டு மகிழ்கிறான்.

'இவன் இவன் இவன்' என்று அனுமனைப் பலமுறை சுட்டிக்காட்டிக் கூறி அவன்மீது படைக்கலன்களை அரக்கர் எறிகிறார்கள். மூங்கிற்காட்டில் எரி எழுந்தாற்போல அரக்கர் அனுமன் மீது மோதுகிறார்கள். ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கிக் கையில் தாங்கி அரக்க வீரர்களை அடித்து வீழ்த்துகிறான். அரக்கரின் தோளோடு தாளும் அற்று வீழ்கின்றன. மேலும் அவர்களைத் தன் வாலினால் பற்றிச் சுழற்றி வீசப் பம்பரம்போல் சுழல்கிறார்களாம் !

அனுமனின் போர்த்திறத்தினை விளக்கும் ஒரு பாடல்.

70 ''தாள்க ளாற்பலர் தடக்கைக ளாற்பலர் தாக்குறு
தோள்க ளாற்பலர் சுடர்விழி யாற்பலர் தொடருங்
கோள்க ளாற்பலர் குத்துக ளாற்பலர் தத்தம்
வாள்க ளாற்பலர் மரங்களி னாற்பலர் மடிந்தார்''

வீரத்தோடு ஈரமும் உடைய அனுமன், அரக்கியர் படும் வேதனை தாங்காமல் சில அரக்கரைக் கொல்லாது விடுகிறான். கரியநிற அரக்கர் நடுவே போர்புரியும் அனுமன் மேகத்திடைத் தோன்றும் சூரியனை ஒத்திருக்கிறான். உடல் முழுதும் விழுப்புண் பெற்றும் அவன் ஒரு சிறிதும் கலங்கவில்லை. தேவர்கள் மலர்மாரி பொழிந்து பாராட்டுகிறார்கள்.

கிங்கரரின் அழிவினை அறிந்த அரக்கர் கோன் வியப்படைகிறான். ''போரிலே ஈடுபட்டு இறந்தனரா ? அல்லது என்

---

70 சுந்தர-கிங்கரர்வதைப்-788

சொல்லை இகழ்ந்து போர் புரியாமல் சென்றனரா? அல்லது மறந்து நீங்கினரா?'' என்று இராவணன் கோபத்துடன் வினவ, அருகில் இருந்தோர் ஒரு குரங்கினுலேதான் பட்டனர் என்று அச்சத்துடன் மெல்லக் கூறுகிருர்கள். ஆனுல் இராவணன் மனதில் வேறோர் எண்ணம் எழுகிறது.

# 17. [71]காற்றின் செம்மல்

இராவணனின் ஆணையின்படி சம்புமாலி நால்வகைப் படைகளுடன் செல்கிருன். இராமபிரானின் வில்லின் நாணொலி போல எழுந்த அனுமனின் ஆரவார வொலி கேட்ட அரக்கர் நெஞ்சில் பயம் தோன்றியதாம். பாம்புகள் நஞ்சை உமிழ்கின்றனவாம். மேகங்கள் சிதறுகின்றனவாம்! அவன் தோளைக் கொட்டி முழக்கும்போது விண்மீன்கள் மலர்களென உதிர்கின்றனவாம்!

அனுமனின் நெற்றி முன்னணிச் சேனையாகவும், கையில் உள்ள நகங்களே வாட்படைகளாகவும், இரு கைகள் அடுத்துவரும் படைகளாகவும், உரனுடைய வாலே பின்னணிப் படையாகவும் விளங்க அவன் போர்க்களத்தில் அரக்கரை எதிர்க்க நிற்கிருனும்! நாற்படையைச் சின்னு பின்னப்படுத்திய அனுமன் சம்புமாலியிடம் இரக்கம் காட்டுகிருன்.

[72]''ஏதி யொன்ருற் றேரு மஃதா
லெளியோ ருயிர்கோடல்
நீதி யன்ரு லுடன்வந் தோரைக் காக்கு நிலையில்லாய்
சாதி யன்றே பிறிதென் செய்தி யவர்பின் றனிநின்ருய்
போதி யென்ருன் பூத்த மரம்போற்
புண்ணுற் பொலிகின்ருன்''

தன்னை எளிதில் அழிக்கமுடியாது என்று அனுமனிடம் வீரவுரை கூறிய சம்புமாலியைக் கொல்கிருன்.

---

71 சுந்தர-அக்க-959

72 சுந்தர-சம்புமாலி-858

இராவணன் சம்புமாலியின் அழிவினை அறிந்து தானே போருக்கு எழ முயலப், பஞ்ச சேனுபதிகள் அவனைத் தடுத்துப் போருக்கு எழுகிருர்கள். அற்பக் குரங்கை வெல்ல வெற்பு எடுத்த திருமேனியான் செல்லத் தேவையில்லை என்று கூறி விடைபெறுகிருர்கள். இந்திரனின் வச்சிரப் படையும், வருணனின் பாசமும், கூற்றுவனின் தண்டாயுதமும், சிவனின் சூலாயுதமும், ஓர் ஊசி குத்தும் அளவான வடுவையும் செய்யவியலாத் தோளாற்றல் உடையவராம் பஞ்ச சேனுபதிகள்! இந்திரனுடைய யானை ஐராவதத்தின் வாலைப் பிடித்துப் போகவொட்டாது தடுத்த பெருவலி படைத்தவராம்! அரக்கர் நடுவே தனியே நிற்கும் அனுமற்கு ஏதேனும் தீமை விளையுமோ என்று தேவர்கள் இரக்கமும் அவலமும் அவன்மீது கொள்கிருர்கள். எவராலும் எளிதில் வெல்லுவதற்கரிய ஐம்பொறிகள் போல் விளங்கும் பஞ்ச சேனுபதியரை அனுமன் வென்று அழிக்கிருன். ஐம்பொறிகளை வெல்லும் அறிவுபோல் அவன் விளங்குகிருன்.

இராவணனின் மகன் அக்ககுமாரன், தந்தையிடம் போருக்குச் செல்ல விடை வேண்டி நிற்கிருன். "இந்திரனைப் பற்றி வருக என என் முன்னவன் மேகநாதனை அனுப்பி அவனுல் நினைத்ததை முடித்தீர்கள். என் மனக்குறை தீர இவ்வலியிலாக் குரங்கைக் கொணர ஆணையிடலாகாதா?" என்று தாழ்ந்த மகனைப் போருக்கு அனுப்புகிருன்.

அனுமன், போர்க்களத்தில் வருபவன் இந்திரசித்தோ அல்லது இராவணன்தானே என்று ஐயுற்று நிற்கிருன்.

73"எண்ணிய விருவர் தம்மு ளொருவனே யான்முன் செய்த
புண்ணிய முளதா லெங்கோன் றவத்தொடும்
பொருந்திஞனே
நண்ணின ஞனு நின்றேன் காலனு நணுகி நின்ருன்
கண்ணிய கரும மின்றே முடிக்குவென் கடிதி னென்ருன்"

ஈண்டுத் தோன்றுபவன் இருவரும் அல்லன். முருகனும் அல்லன் எனத் தெளிகிருன்.

---

73 சுந்தர-அக்க-952

'அரக்கர் கூட்டத்தை அழித்தது இச்சிறு குரங்குதானே' என்று கூறி வாளெயிறு தோன்ற நகுகிறுன். ''ஐய! குரங் கென இகழ வேண்டா. உன் தந்தையை வலியடங்குமாறு செய்தது வாலி என்னும் ஒரு குரங்குதான் என்பதனை மறந் தனை போலும்'' எனத் தேரோடு வந்த அக்ககுமாரனிடம் பணிவோடு தெரிவிக்கிறுன். அதற்குப் பதிலாக மூன்றுல கிலும் சென்று குரங்கு என்று ஓதும் கருவையும் அழிப்பதாக அக்ககுமாரன் சூளுரைக்கிறுன். கடும்போர் நிகழ்கிறது. அனுமன் மத்துப்போலவும், அரக்கர் 74 ''தாழிப்படு தயிர்'' போலவும் தோன்றுகிறுர்களாம். அக்ககுமாரனைத் தரை யோடு வைத்து அனுமன் தேய்த்துக் கொல்கிறுன். இறவாத அரக்கர் எவ்வாறு தப்பினர் என்பதைக் கம்பர் அழகான கற்பனையோடு கூறுகிறுர்.

75''மீனுய் வேலையை யுற்றுர் சிலர், சிலர் பசுவாய்
வழிதொரு மேய்வுற்றுர்
ஊனுர் பறவையின் வடிவுற் றுர்சிலர் நான் மறையவ
ருவானுர்
மானுர் கண்ணின மடவராயினர் முன்னே தங்குழல்
வகிர்வுற்றுர்
ஆனுர் சிலர்சில ரையா நின்சர ணென்றுர் நின்றவ
ரரியென்றுர்''

இவ்வாறு பல வடிவங்கள் பெற்று அரக்கர் அனுமனிடம் இருந்து பிழைத்துச் செல்கிறுர்கள். சிலர் சரணமென்று தாழ்ந்து உய்வடைகிறுர்கள். போர்க்களச் செய்தி இராவ ணனைச் சென்றடைகிறது. மகன் அக்ககுமாரனை இழந்த துயரம் தாங்காமல் மண்டோதரி கணவனின் காலடியில் வீழ்ந்து புலம்புகிறுள். இறவாமல் நிற்கும் அனைவரும் அரற்றுகிறுர்கள். இலங்கையே துயரத்தில் தவிக்கிறது.

---

74 சுந்தர-அக்க-963 75 சுந்தர-அக்க-973

# 18. [76] காற்றின் சேய்

தம்பியின் மரணம் அறிந்ததும் இந்திரசித்து அனுமன் மீது அளவிறந்த சினங் கொள்கிறான். ஊழிக்காலத்துச் சிவன் போல வெகுண்டு எழுந்து ஆயிரத்து இருநூறு பேய்கள் ஈர்த்துச் செல்லும் தேரேறிச் செல்கிறான். அவனுடைய நிலையினை,

[77]''தம்பியை யுன்னுந் தோறுந் தாரைநீர் ததும்புங்
கண்ணன்
வம்பியல் சிலையை நோக்கி வாய்மடித் துருத்து நக்கான்
கொம்பியன் மாய வாழ்க்கைக் குரங்கினாற் குரங்கா
வாற்றல்
எம்பியோ தேய்ந்தா னெந்தை புகழன்றோ தேய்ந்த
தென்றான்''

என்று கவிச்சக்கரவர்த்தி நவில்கிறார்.

ஆம்! அன்று தாடகை வீழ்ச்சி இராவணனின் வெற்றியம் பதாகை வீழ்ச்சிக்கு முன்னோடி என்று வர்ணித்த கவிஞர் அக்ககுமாரன் அழியவில்லை; இராவணனின் புகழன்றோ தேய்ந்தது என்று இவண் கூறுகிறார்! அரக்கரின் வீழ்ச்சிக்கு அவருடைய இழிசெயலே காரணம் ஆகும். இந்திரசித்து, இராவணனின் மாளிகையை அடைந்து தம்பியின் மறைவால் எய்திய சோகம் மிகத் தந்தையின் காலில் வீழ்கிறான். அவனும் மகனை இரு கைகளால் எடுத்துத் தழுவுகிறான். அரக்கியர் வயிற்றில் அடித்து அலறுகிறார்கள். அவர்களை எல்லாம் விலக்கி இந்திரசித்து அரக்கர்கோனை நோக்கி,

''மன்னா! ஆராயாமல் செய்கின்ற செயலால் அல்லல் உறுகிறாய். கடல் தாண்டி வந்த குரங்கின் ஆற்றலை அறியாமல் அரக்கரை ஏவி அவர்தம் இழப்பிற்குக் காரணமாகிறாய். எதிர்த்துச்சென்ற அரக்கரின் அழிவிற்குக் காரணமான

76 கிட்கிந்தா-சம்பாதிப்-994 77 சுந்தர-பாசப்-988

அனுமன் என்னும் அக்குரங்கு மும்மூர்த்தியின் உருவம் தான் என்று எண்ணலாமே! திசை யானைகளின் ஆற்றலையும், கைலைமலையையும், மூன்று உலகங்களையும் வென்றாய். ஆற்றலுடைய குரங்கை ஆடவிட்டு, அழிக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறாயோ? ஐய! ஏயெனும் அளவில் நானே சென்று அக்குரங்கினைப் பற்றி உன் முன் தருகுவன். இனி இடரால் வருந்தற்க'' என்று வீர உரை பகர்ந்து செருக்களம் செல்கிறான். அனுமனைக் கண்டவுடன் அவனுடைய ஆற்றலை இந்திரசித்து வியந்து தன்னுள் பாராட்டுகிறான். வீரரின் ஆற்றலை வீரரே உணர்வர். இதுவரை துன்பம் ஏதும் அறியாதவன் அனுமனின் செயலறிந்து சிறிது ஏக்கம் அடைகிறான். ''அரக்கரோ பலர்! அழித்தவனோ ஒருவன்!! இவனுக்கே அரக்கர் படை தோற்றதே! இராமன் எதிர்த்து வரும்பொழுது இலங்கை வேந்தன் எப்படை கொண்டு வெல்வான்?'' அரக்கர் வீழ்ந்து கிடத்தலைக் கண்டு,

78 ''புண்ணுளே கோலிட் டன்ன''

மானத்தால் புழுங்குகிறான்.

''கானகத்திலே அத்தை சூர்ப்பனகையின் அவல நிலைக்கும், கரனின் இறப்பிற்கும் மானிடர் இருவரே காரணம். ஈண்டு நேர்ந்த அரக்கரின் அழிவிற்கு ஒரு குரங்கே காரணம்! என் வீரம் நன்று, நன்று.'' என்று இராவணன் சேய் பலவாறு புலம்பித் தம்பியின் உடலைக் கண்டு மேலும் வருந்துகிறான்.

''இதோ வருகிறவன் இந்திரசித்து என்பான் போலும்! இவனை இன்று எதிர்த்து வெற்றியோ தோல்வியோ அடைவேன். இவன் என் கையால் இறப்பான் என்றால் இராவணனுக்கு இனி வருவது கேடே என்று கூறலாம். அவனும் சீதையை இராமன்பால் சேர்ப்பிப்பான். அரக்கரும் செருக்கு அடங்குவர். இந்திரன் முதலிய தேவர்

---

78 சுந்தர-பாசப்-1001

உய்வர்'' என்று அனுமன் எண்ணியவாறே அரக்கர்களை அழிக்கிறான். [79] 'வாரும் வாரும்' என்று அழைக்கின்ற அனுமனிடத்து, வீரன் இந்திரசித்து புன்முறுவலும் சீற்றமும் ஒருசேர வெளிப்பட வருகிறான். இந்திரசித்தின் நாணொலிக்குப் பதிலாக அனுமன் தோள்கொட்டி ஆர்க்கிறான்.

[80] ''நல்லை நல்லையிஞ் ஞாலத்துள் நின்னொக்க நல்லார்
இல்லை இல்லையா லெறுழ்வலிக் கியாரொடு மிகல
வல்லை வல்லையின் றுகுநீ படைத்துள வாணாட்கு
எல்லை யெல்லையென் றிந்திர சித்துவு மிசைத்தான்''

இது அனுமனை நோக்கி இந்திரசித்து மொழிந்த வீர வாதம்.

[81] ''நாளுக் கெல்லையு நிருதரா யுலகத்தை நலியுங்
கோளுக் கெல்லையுங் கொடுந்தொழிற் கெல்லையுங் கொடியீர்
வாளுக் கெல்லையும் வந்தன வகைகொண்டு வந்தென்
தோளுக் கெல்லையொன் றில்லையென் றநுமனுஞ் சொன்னான்''

இது அனுமன் விடுத்த மறுமொழி.

அனுமனின் பேருருவம் இந்திரசித்தை வியப்பில் ஆழ்த்துகிறது. அவனுடைய தேரொடு சாரதியையும் நெடுங் கைகளால் அனுமன் அடித்து வீழ்த்துகிறான். மேலும் மேகநாதனின் வில்லையும் இராமதூதன் சிதைக்கிறான். இராவணன் மகன் எறிந்த நூற்றுக்கணக்கான கணைகளால் அனுமன் சிறிது தளர்ச்சி உறுகிறான். உடனே எழுந்து ஒரு மரத்தால் இந்திரசித்தின் தலையில் அடிக்க அவனும் சிறிது தளர்ச்சி அடைகிறான். அனுமன் அவனைத் தேரோடு கல்லி எடுத்து விண்ணில் எறிகிறான். மண்ணில் வீழ்ந்த இந்திரசித்து விரிஞ்சனின் பெரும்படையினை வணங்கி அனுமன்மீது எய்கிறான். பிரமன் படை நாகவடிவில் சென்று அனுமன்

79 சுந்தர-பாசப்-1018 80 சுந்தர-பாசப்-1021
81 சுந்தர-பாசப்-1022

தோள்களைக் கட்டுகிறது. கடைநாளில் இராகுவுடன் சேர்ந்து வீழ்ந்த திங்கள்போல, அறக்கடவுள் கண்ணீா சொரியப் பிரமன் படைக்குத் தளர்ந்த அனுமன் மண்ணில் சாய்கிருன். பிரமன் படைக்குக் கட்டுப்படல் கருமமென்று எண்ணியே சாய்ந்த அனுமனின் மனநிலையினை இந்திரசித்து எவ்வாறு அறிவான் ?

அரக்கர் ஆரவாரிக்கிருர்கள். ஆரவாரம் மிக்க இலங்கை பாற்கடல் போலவும், அனுமன் மந்தர மலை போலவும், அனுமனைக் கட்டிய கயிறு வாசுகி போலவும் இருக்கின்றனவாம்.

82''எய்யுமி னீருமி னெறிமின் போழுமின்
கொய்யுமின் குடரினைக் கூறு கூறுகள்
செய்யுமி னுலகிடைத் தேய்மின் தின்னுமின்
உய்யுமே லில்லைநம் முயிரென் ருேடுவார்''

கட்டுப்பட்ட நிலையில் இருந்த அனுமனை நோக்கி அரக்கர்கள் இவ்வாறு கூக்குரல் இடுகிருர்கள்.

83''எந்தையை யெம்பியை யெம்மு னேர்களைத்
தந்தனை போகெனத் தடுக்கின் ருர்பலர்''

அரக்கரை இழந்த அரக்கியரும் அனுமனின் தலைமேல் உள்ள திருமங்கிலியத்தைப் பறிக்க வேண்டுமென்று துடிக்கிருர்கள். அனுமன் புன்னகையுடன் இலங்கை நகரைக் கண்டு செல்ல, அரக்கரோ அச்சத்தால் இரிந்து ஓடுகிருர்களாம்! நாகபாசத்திற்குக் கட்டுப்பட்டுச் செல்லும் அனுமனைச் சிலர் காக்க வேண்டுமென்று வணங்குகிருர்களாம்! ஐம்பதினுயிரம் அரக்கர் அனுமனை ஈர்த்துச் செல்கிருர்கள். எமனே அனுமனுய் வந்து அரக்கரைக் கலக்குகிருனே? சிவன்தான் சீதையின் பொருட்டுக் குரங்காய்த் திரிகிருனே? மாளிகைச் சாரளத்தின் வழியாக அரக்கியர்

82 சுந்தர-பிணி வீட்டு-1047
83 சுந்தர-பிணி வீட்டு-1050

வியந்து நோக்குகிறார்கள். அரம்பையர், வித்தியாதரப் பெண்டிர், நாக கன்னிகையர் போன்றோர் அனுமனின் ஆற்றலைக்காண எங்கும் கூடுகிறார்கள். அவர்கள் ஏன் கண்ணீர் சிந்துகிறார்கள்? சீதை படும் துயருக்கா? அனுமனின் நிலைக்கா? அறத்தின் இழிவிற்கா? யாரே உரைக்க வல்லார்?

அனுமன் அரக்கரோடு கட்டுப்பட்டு ஏகுவதன் காரணம் என்ன? இராவணனைக் காண வேண்டுமென்ற ஆர்வம் தானே காரணம்! வாயுதேவனின் கருணையும் இராமன் சேவடிச் சிந்தையும், சீதை, வானவர் தந்த வரமும் அனுமனுக்கு இருப்பதால் எளிதில் நாகபாசத்தில் இருந்து விடுபட முடியும் என்றாலும், அவன் அவ்வாறு செய்ய விரும்பவில்லை. இராவணனைக் கண்டு அவனுக்கு அறிவுரை கூறினால் மிதிலைச் செல்வியை அவன் தன்னிடம் ஒப்படைக்கலாம் என்ற உணர்வும், அனுமன் கொள்கிறான். இராவணனையும் அவனைச் சூழ்ந்திருக்கும் மந்திரச் சுற்றத்தின் கருத்தினையும் அறிய அரிய வாய்ப்பன்றோ! வாலியின் மரணத்தையும் மராமரத்தின் நொய்மையையும், எண்ணிறந்த வானரரின் ஆற்றலையும், அரக்க வேந்தன் உணருமாறு எடுத்துரைக்கலாம் என்ற எண்ணத்தில் அனுமன் செல்கிறான். தன் மகன் இந்திரசித்து எய்த நாகபாசம் அனுமனைப் பற்றி வலி இழக்கச் செய்தது என்று கூறிய தூதுவர்க்கு இலங்கைக் கோன் பரிசளிக்கிறான்! அனுமனைக் கொல்லாமல் தன் முன் கொணர அரக்கர்க்கு ஆணையிடுகிறான்.

அசோக வனத்தில் உள்ள சீதைக்குத் திரிசடை என்னும் நல்லாள், அனுமனுக்கு உற்ற இடர் குறித்துக் கூறுகிறாள். வலையிடைப்பட்ட தன் பார்ப்பினைக் கண்ட தாய்ப்பறவை அன்னம் எவ்வாறு துடிக்குமோ அதேபோலே அனுமனுக்கு நேர்ந்த துன்பம் அறிந்து தாயென நிற்கும் தேவி துடிக்கிறாளாம்!

''அனுமா! பேருருவம் கொண்டவனே! சாத்திரக் கலைஞனே! கடல்கடந்து இந்நகருள் போந்தவனே!

அரக்கரிடம் சிறைப்பட்டு என் துயரைப் பெருக்கவா ஈண்டு வந்தனை?''

[84]''ஆழி காட்டியென் னுருயிர் காட்டினுய்க்கு
ஊழி காட்டுவெ னென்றுரைத் தேன்''

''என்னுரை பொய்க்குமோ? உன் தோள்வலி காட்டிப் பழிபூண்டனையோ? உன் வரவால் என் உயிர் நிலைத்தது. உன் தூதுரையால் நாயகன் வருவான்; அரக்கரை மாய்த்து என்னைக்கொண்டு ஏகுவான் என்று எண்ணியிருந்தேனே. அதற்குள் பகைவர் வசப்பட்டனையே'' என்று 'தீயைச் சுட்டதொர் கற்பெனும் தீயனுள்' ஆன தேவி அனுமனைக் குறித்துப் புலம்பி மயக்கம் அடைகிறுள்.

# 19. [85]தனித் துணைவன்

மூவுலகங்களிலும் நிழற்றும் வெண்கொற்றக் குடைக் கீழ் பொலிவுடன் இராவணன் வீற்றிருக்கிறுன். மாருதி அவனைக் கண்டவுடன் பாம்பைக் கண்ட கலுழன் போலச் சீற்றங் கொண்டு அவன் மேல் பாய எண்ணுகிறுன்.

''உறங்கும் பொழுது கொன்றுன் என்ற பழிக்கு அஞ்சியே அப்பொழுது இவனைக்கொல்லவில்லை. இப்பொழுதே இவனைத் தலைகள் பத்தும் சிதறும்படி அடித்து வீழ்த்திச் சீதையைச் சிறைமீட்டு அகல்வன். இந்திரசித்தால் சிறைப் பட்ட காலையில் உயிர்துறக்காது இருந்தது இவனைக் கொல்லலாம் என்ற எண்ணத்தால் அன்றே!'' என்று எண்ணிய அனுமன் அச்செயல் தக்கதன்று என மனம் மாறு கிறுன்.

''இராமனைத் தவிர இராவணன் யாராலும் வெல்லப் படான். அதுபோல என்னையும் இவனுல் வெல்ல முடியாது.

84 சுந்தர-பிணி வீட்டு-1080
85 சுந்தர-பிணி வீட்டு-1111

இவனை என்றாலும் வெல்ல முடியாது என்பது உண்மைதான். இருவரும் பொருவேம் என்றால் தொடுத்த போர் என்று முடியும்? அரக்கனின் தோள்களையும் தலைகளையும் துணித்து மண்ணில் வீழ்த்தி உலகோர் இன்புறச் செய்வேன் என்று சொன்ன ஐயன் சூளுரை என்னும்? ஒரு மாத எல்லைக்குள் முடிக்க வேண்டிய தொழிலை முடிக்காவிடின் சீதை தன் உயிரை முடித்துக் கொள்வாளே!''

இவ்வாறு அனுமன் எண்ணியவாறு அடங்கி நிற்கிறான்.

[86]''தூதனுந் தன்மையே தூய்தென்று'' உன்னுகிறான் இந்திரசித்து அனுமனை அறிமுகப்படுத்தியவுடன் இராவணன் கண்களில் கனல் எழ அவனை நோக்குகிறான். அதனால் அனுமனின் மேனிமயிர் பொசுங்குகிறதாம்! இராவணன் விடும் பெருமூச்சால் எழுந்த வெம்புகை நாகபாசம்போல் அவனைக் கட்டுகிறதாம்!

''குரங்கே! நீ யார்? இங்கு எதற்காக வந்தனை? திருமாலா? சிவனா? இந்திரனா? பிரமனா? ஆதிசேடனா? பெயரையும் உருவத்தையும் மறைத்து வந்துள்ளனை யமனோ? முருகனோ? தென் திசைக் கிழவன் அகத்தியனோ? திசைக் காவலனோ? யார் நீ? முனிவர் யாகத்தில் வெளிப்பட்ட பூதமோ? வேறு தேவனோ? உன்னை விடுத்தவன் யார்? சொல்லுதி!'' என்று அமரர் புகழ் அழிய வந்த இராவணன் ஆணையிடுகிறான்.

''அரக்கனே! அடியேன், நீ கூறிய யாவரும் அல்லேன்! வில்லேந்திய வீரன் இராமனின் தூதன் யான். அவன் எவரும் அறிதற்கரிய இராகவன். இருவினை முடிக்க வந்துள்ளான். உங்களுடைய ஆற்றலையும், வரபலத்தையும், மறவழியில் ஈட்டிய செல்வத்தையும் ஒரம்பினால் அழிக்கவே தோன்றியுள்ளான். அவன் தேவரும் மூவரும் அல்லன். தயரதனின் தனிமகன். அவன் நினைத்ததை முடிக்கவல்லான். வேதமும் அறமும் போற்ற வாழும் மெய்யற மூர்த்தியாவான்.

---

86 சுந்தர-பிணி வீட்டு-1111

87'' சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டயோத்தி
வந்தான் ''

தெருவில் ஏந்தி உலகினில் தோன்றியவன். அறத்தை நிலை நிறுத்தவும் மறத்தை அழிக்கவும் பிறந்தவன். அத்தகை யோனுக்கு அடிமைத் தொழில் புரியும் அடியேனின் நாமம் அனுமன் என்பதாகும். இராகவனின் தேவியைக் கவர்ந்த கள்வனின் இருப்பிடத்தை நாடி வானரர் படை நாற்றிசை யிலும் சென்று வருகிறது. தென் திசைக்கண் வந்த வாலி சேய் அங்கதன் வேண்ட அவ்வண்ணம் தூதனாய் நான் தனியே இவண் வந்தனன்'' என்று அனுமன் கூறிவரும்பொழுது இராவணன் வாலியின் நலம்பற்றி வினவுகிறான்.

88''அஞ்சலை யரக்க பார்விட் டந்தர மடைந்தா னன்றே
வெஞ்சின வாலி மீளான் வாலும்போய் விளிந்ததன்றே
அஞ்சன மேனி யான்ற னடுகணை யொன்றான் மாழ்கித்
துஞ்சின னெங்கள் வேந்தன் சூரியன் றோன்ற லென்றான்''

என்ன எள்ளல் நிறைந்த பதில்! அஞ்ச வேண்டாமாம்! இராவணனுக்கு வாலியின் வால் படுத்திய பாட்டின் மீதே கவலை என்ற உண்மையை எவ்வாறு நயமாக எடுத்துக் கூறு கிறான். வாலியும் இறந்தானாம்! அவன் வாலும் போய் விளிந்ததாம்!

அனுமனின் பேச்சு தன் நெஞ்சைச் சுட்டது என்றாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் இராவணன் வாலியை ஓரம்பால் அழித்த இராமன் என்பான் யாண்டுளான் என்று கேட்கிறான். வாலி சேய் அங்கதனையும் அக்கறையுடன் வினவுகிறான். அதற்கு அனுமன் தக்க பதில் கூறுகிறான்.

''உங்கள் குலத் தலைவனைக் கொன்றவனுக்கு அடிமைத் தொழில் புரிகிறீர்களா? நன்று! நன்று! இப்பொழுதும் உங்கள் புகழ் அழிவடையாமல் உங்களுடன் பொருந்தி

---

87 சுந்தர-பிணி வீட்டு-1125
88 சுந்தர-பிணி வீட்டு-1130

இருந்ததென்றால் நிலவுலகமானது பெண்களின்பேதைமையை உடையது எனலாம். சூரியன் மகன் சுக்கிரீவன் அனுப்ப வந்துள்ள நீ என்னிடம் சொல்ல வந்ததை விரைவில் கூறுக. அஞ்சாமல் கூறு. நாங்கள் தூதுவனாக வந்த உன்னைக் கொல்ல மாட்டோம்'' என்று இராவணன் ஏளனமாக அனுமனிடம் கூறுகிறான்.

அனுமன் நினைத்தற்கரிய நற்குணங்களை உடையவன். இராவணனுக்கு ஏற்ற அறிவுரையினைக் கூறும் தருணம் அது என்று எண்ணிக் கூறத் தொடங்குகிறான்.

''இலங்கை வேந்த! கிட்கிந்தை வேந்தன் சுக்கிரீவன் கூறிய மாற்றத்தை மொழியக் கேள். நல்லறத்தை நாடாமல் வாழ்க்கையைக் கொன்னே கழித்தனை. பிறன் மனை நயந்தனை. உறுதியான சொல்லைக் கேட்டால் நீடூழி வாழலாம், தீயைக் காட்டிலும் தூயவளான சீதைமேல் ஆசை வைத்தனை. அதனால் வரபலம் முதலியவற்றை இழந் தனை. தேவர்க்கு இடுக்கண் செய்தனை. அதனால் உனக்கு முன்னர் இருந்த பெருமையினையும் நீ இழந்தனை. எஞ்சி நிற்கும் பெருமையும் இன்று நாளை தேயும். அறம் தோற் குமோ? பாவம் வெல்லுமோ? சொல்லாய். அறம் திறம்பியோர்க்கு நல் வாழ்வு உண்டோ? காமத்தால் அழிந்த அரசர் எண்ணிறந்தோர். பொருளையும் காமத்தை யும் பொருளெனக் கருதாது அருளைப் பொருளெனக் கருதுவர் மேலோர். நீதியையும், வேத நெறியினையும் உன்னைப்போல் அறிந்தார் இவ்வுலகில் யாரே உளர்? ஆனால் அவற்றை எல்லாம் பிறன்மனை நயத்தலின் மூலம் கெடுத்தனை. விருப்ப மில்லாத வெறுப்புக் கொண்ட பெண்ணோடு சிறப்பாக வாழலாம் என்று நினைப்பது மூக் கிழந்த பெண்ணை அழகுடையவள் என்பது போலாம்! பத்துத் தலைகள், இருபது கைகள் யாருக்கு உள என இறு மாப்புக் கொள்ள வேண்டா. நூறு ஆடை என்றாலும் நெருப்பிலிட்டால் ஒரு நொடியில் கரிந்து போகுமே! உன்னைத் தவிர இராமனை மறந்தார் யாருளர்? ஆகவே

செய்தக்க அல்ல செய்து கெட்டழியாமல் செய்தக்க செய்து உய்வாய். இராமனிடம் அவன் தேவியினை விடுத்து வாழ்வாய். இவைதாம் என்னிடம் சுக்கிரீவன் கூறிய மொழிகளாம்'' என்று அனுமன் கூறி முடிக்கிறான்.

''என்ன! குன்றில் வாழும் குரங்கொன்று எனக்கு அறிவுரை கூறுவதா? நன்று நன்று'' என்று இலங்கை வேந்தன் கூறி நகைக்கிறான். தூதுவனாக வந்து அரக்கரைக் கொன்றது ஏன் என்று வினவுகிறான். இராவணன் என்பானைக் காணவேண்டும் என்ற ஆவலால் தான் அச்செயல் புரிந்தது என்கிறான்.

அனுமனைக் கொல்ல அரக்கர்கோன் ஆணையிடுகிறான். தூதுவனைக் கொல்லல் தக்கதன்று என்று இராவணன் இளவல் வீடணன் எடுத்துரைக்கிறான்.

[89]''மாதரைக் கொலைசெய் தார்களுளரென வரினும் வந்த
தூதரைக் கொன்று ளார்கள் யாவரே தொல்லை நல்லோர்''

தூதரைக் கொன்றவர் உலகில் யாருமில்லை என்கிறான். நகைப்பிற்கிடமான இழிசெயலைச் செய்ய வேண்டாம் என்று அண்ணனை வேண்டி நிற்கிறான். கொடுமையை நினைந்து செய்த சூர்ப்பணகையைக் கொல்லாமல் அவயவக் குறைப்பு மட்டும் செய்து அனுப்பினர் மானிடர் என்பதை உணர வேண்டும் என்று வீடணன் கூறி அமர்கிறான்.

''நம்பீ! நல்லதே உரைத்தாய்! இக்குரங்கின் வாலை எரியிட்டுப் பொசுக்கி நகரை வலம் வரச்செய்து எல்லை கடந்து போம்படித் துரத்துக'' என இராவணன் ஆணையிடுகிறான்.

இந்திரசித்து பிரமன் படையினை விடுவிக்க அரக்கர் கயிறுகளால் அனுமனைக் கட்டுகிறார்கள். மங்கல நாணைத்

---

89 சுந்தர-பிணி வீட்டு-1159

தவிர உலகில் உள்ள கயிறுகள் அனைத்தும் அனுமனைக் கட்ட உதவுகின்றனவாம் !

நாகபாசத்தை மீறி அறம் கடந்தவன் என்ற பழி தனக்கு வாராவண்ணம் அரக்கரே அதனை விடுவித்தனர் என எண்ணி அனுமன் அகமகிழ்கிறான். தன்வாலைச் சுடுவது ஊரைச் சுடுக என்று உரைப்பது போலாகும் என்று எண்ணி உவக்கிறான்.

தன்னைப் பிணிக்கும் ஆற்றல் கயிறுகளுக்கு இல்லை என்று தெரிந்தும் அனுமன் அடங்கியே நிற்கிறான். உரிய காலம் வரும் வரை அடங்கி நிற்பது ஆன்றோர்கடன். விஞ்சையினை அறிந்தும் அறியாதான்போல நின்ற அனுமன், அவிஞ்சை என்னும் பொய்ப் பொருளை அறிந்தும் அறியாதான் போல உலகில் ஒழுகும் மெஞ்ஞானிபோல விளங்குகிறானும். அரக்கர் இழுத்த இழுப்பிற்கெல்லாம் இசைந்து மெல்லியன் போல் அவர் பின்னால் ஏகுகிறான். அவனுடைய வாலில் துணிகளைச் சுற்றி, நெய்யும் எண்ணெயும் வார்த்து எரியூட்டி ஆரவாரம் செய்கிறார்கள் கொடிய அரக்கர்கள். 'வம்மின் வம்மின்' என்று முரசறைந்து எல்லாரையும் அழைக்கிறார்கள்.

சானகிக்கும் செய்தி அறிவிக்கப்படுகிறது.

'' ... ... ... [90] ''அவளும் உயிர்பதைத்தாள்
வேர்த்தா ளுலந்தாள் விம்மினாள் விழுந்தா ளழுதாள்
வெய்துயிர்த்தாள்''

என்று கம்பர் விளக்குவார்.

''நெருப்புக் கடவுளே ! நாய் போன்ற அரக்கர் துன்புறுத்தத் தாய் போன்ற அனுமன் துன்பம் அடைவது நீதியோ ? நீயே உலகிற்குச் சான்றாவாய். நான் கற்பினால் தூயேன் என்றால் அனுமனைச் சுடாதே'' என்று நாயகி ஆணையிட அனலவன் இசைகிறான். அனுமனின் மெய்மயிர்கள்

---

90 சுந்தர-பிணிவீட்டுப்-1162

தளிர்த்து மேனி சிலிர்க்க, எலும்பு வரை அவன் வால் தண்மையால் குளிர்கிறது ! இச்செயலுக்குக் காரணம், [91] ''சனகன் பாவை கற்பினுல் இயன்றது'' என்று அறிந்து பெருங்களிப்பு அடைகிருன். அரக்கர் பிடியில் இருந்து விடுபட்டு அனுமன் விண்ணில் எழ, அவர்கள் அனுமனைக் கட்டிய கயிற்றைப் பிடித்துத் தொங்கிய வண்ணம் சிறிது தூரம் சென்று மண்ணில் தலைகுப்புற வீழ்கிருர்கள். அவ்வாறு நிலைகுலைந்து வீழ்ந்த அரக்கர் ஒரு நூருயிரமாம்.

அனுமனின் போர்வால் இலங்கை நகரில் தாக்கிய இடங்கள் எல்லாம் எரிவயப்படுகின்றன. அவனுடைய நெடு வால் சிவனின் மழுப் போலவும், திரிபுரம் எரித்த காலையில் சிவன் எறிந்த கணை போலவும் தோன்றிச் செயல் புரிகிறதாம்! உருத்திரன் போலவும், நெருப்புடன் கூடிய இடி போலவும் அனுமன் இலங்கையை எரியூட்டுகிருன். கனலவனும், முனிவர் யாகத்தை அரக்கர் அவித்ததால் பசியுடையவனுக இருக்கிருன். அதனுல் உருத்திரன் வமிசமான அனுமனின் வாலை பற்றிய நிலையில் அரக்கரின் நகர் முழுவதையும் பசி தீர விரும்பி உண்கிருனும்! எங்கும் புகை மண்டுகிறது. அரக்கர் அரக்கியர் வெப்பம் தாளாமல் கடலில் வீழ்கிருர்கள். இராவணன் அரண்மனை பொன்மயமானது. அதில் நெருப்புப் பரவவே பொன் எல்லாம் உருகுகிறது. அந்நிலையில் அவ்வரண்மனை தென் திசையிலும் ஒரு மேரு உள்ளதென்று சொல்லும்படியாக விளங்குகிறது. இராவணன் முதலியோர் புட்பக விமானத்தில் ஏறித் தப்புகிருர்கள். திரிகூடமலை மீதுள்ள இலங்கை இவ்வாறு அனுமனின் வாலில் கொளுவிய தீயால் வெந்து கருகுகிறது.

''ஊழிக் காலம்தான் வந்ததோ? நெருப்பால் இலங்கை அழியக் காரணம் என்ன?'' என்று இராவணன் சினத்துடன் கேட்கச் சுற்றத்தாரை இழந்த வல்லரக்கர்

---

91 சுந்தர-பிணிவீட்டுப்-1167

கைகூப்பி வணங்கித் [92]"தரங்க வேலையி னெடியதன் வாலிட்ட தழலாற் குரங்கு சுட்டதீ" என்று கூறுகிறார்கள். இதனைக் கேட்டவுடன் அரக்கர் கோன் கொதிக்கிறான்.

"அற்பக் குரங்கால் இலங்கை எரிந்து சாம்பலாகிறது. எங்கும் சாம்பல் பறக்கிறது. செந்தீ உண்டு ஏப்பமும் இடுகிறது. இதைக் கண்டு தேவர் நகைப்பார்களே ! நம் போர்த் திறம் நன்று, நன்று" என்று இராவணன் சினங்கொண்டு சிரித்து.

"உண்ட நெருப்பைப் பற்றிக் கொண்டணைக" என்று ஆணையிடுகிறான். மேலும் "செற்ற குரங்கைப் பற்றுமின்" என்று கோபத்துடன் பணிக்க அவர்கள் விடைபெற்றுச் சென்று அனுமனை அணுகி,

[93]"பற்றுதிர் பற்றுதிர் என்பார்
ஏற்றுதி ரெற்றுதி ரென்பார்"

அதனைக் கேட்ட மாருதி அவர்களைத் தன் வாலினால் பிணித்து மரத்தால் அடித்துக் கொல்கிறான். அரக்கர் வெள்ளம் ஆறெனை ஓடுகிறது. அனுமன் யமனைக் காட்டிலும் மும்மடங்கு வேகத்துடன் ஐம்பதினாயிரம் அரக்கரைக் கொன்று குவிக்கிறான். தப்பிப் பிழைத்தோர், கடலில் வீழ்ந்து இறக்கிறார்கள். தன் வாலில் உள்ள நெருப்பினைக் கடல் நீரால் அவிக்கிறான். அசோகவனம் நெருப்பால் ஒரு சிறிதும் அழியவில்லை என்று விஞ்சையர் கூற, மகிழ்ந்து சென்று பைந்தொடி தாள்களைப் பணிகிறான்.

[94]"பார்த்தனள் சானகி பாராக்
கூர்த்தெரி மேனி குளிர்ந்தாள்
வார்த்தையென் வந்தனை யென்னாப்
போர்த்தொழில் மாருதி போனான்"

---

92 சுந்தர-இலங்கை எரியூட்டுப்-1231
93 சுந்தர-இலங்கை எரியூட்டுப்-1239
94 சுந்தர-இலங்கை எரியூட்டுப்-1249

அனுமன் போனபின், கள்ளவாள் அரக்கர் கண்டால் பிடிப்பர் என்று எண்ணிக் கனலவனும் மறைகிறுனும்!

# 20. [95]மருத்தின் மைந்தன்

இலங்கையில் இருந்து அனுமன் விண்வழியாகப் பறந்து வரும்பொழுது மைநாகமலையில் முன் அளித்த வாக்குறுதிப் படித் தங்குகிறுன். இலங்கை சென்று வந்த விபரத்தைக்கூறி விடைபெற்று மீண்டும் பறந்து வந்து மகேந்திர மலையில் வானரர் மகிழும் வண்ணம் குதிக்கிறுன். தாய்ப் பறவை யைக் கண்ட பார்ப்புகள் எவ்வாறு மகிழுமோ அத்தகைய மகிழ்ச்சியினை அனுமனைக் கண்ட வானரர் அடைகிறுர்கள். அவர்கள் அடைந்த மகிழ்ச்சிப் பெருக்கைக் கம்பர் அழகாகக் கூறுகிறுர்.

[96]''அழுதனர் சிலவர் முன்னின் ருர்த்தனர்
சிலவ ரண்மித்
தொழுதனர் சிலவ ராடித் துள்ளினர் சிலவ ரள்ளி
முழுதுற விழுங்கு வார்போன் மொய்த்தனர்
சிலவர் சுற்றும்
தழுவினர்சிலவர் கொண்டு சுமந்தனர் சிலவர் தாங்கி''

அளவு கடந்த மகிழ்ச்சியில் சில வானரர் அழுதனராம்! 'தலைவ! உன் முகக்குறியே வினையின் வெற்றியினை அறிவிக் கிறது. காய், கனி, கிழங்கு, தேன் அருந்திக் களைப்பாறுக' என்று கூறி விருந்தோம்புகிறுர்கள். அனுமன் உடல் முழுவதும் ஏற்பட்ட விழுப் புண்களைக் கண்ட வானரர் வருந்துகிறுர்கள்.

அங்கதன் சாம்பன் போன்றேரை வணங்கி, அனுமன் சீதாதேவி மங்களம் உண்டாகட்டும் என்று வாழ்த்தியதைக்

---

95 சுந்தர-இலங்கை எரியூட்டுப்-1258
96 சுந்தர-இலங்கை எரியூட்டுப்-1254

கூறுகிறுன். அரக்கரோடு நடத்திய போரையோ, நெருப் பிட்டு இலங்கையை எரித்ததையோ தற்புகழ்ச்சியாகும் என்று நினைத்து அனுமன் கூறவில்லை. ஆண்டகையின் மனைவி சிதையின் மனத்திலுள்ள மாண்புடைய கற்பொழுக்கத்தை விரித்துரைக்கிறுன். அனுமன் சொல்லாதவற்றை குறிப்பால் அவனுக்கு உணர்த்துகிறுர்கள்.

97"பொருதமை புண்ணே சொல்ல வென்றமை
போந்த தன்மை
உரைசெய லூர்தியிட்ட தோங்கிரும் புகையே யோதக்
கருதலர் பெருமைதேவி மீண்டிலாச் செயலே காட்டத்
தெரிதர வுணர்ந்தேம் பின்ன ரென்னினிச்
செய்துமென்றுர்"

கருதியது முடித்த அனுமனின் திறத்தினைப் புகழ்ந்த வானரர் இனிச் செய்யவேண்டிய செயல் என்ன என்று கூறவேண்டு கிறுர்கள்.

இனிச் செய்யவேண்டியது நாயகன் துயர் தீரச் சீதையைக் கண்ட செய்தியினைக் கூற விரைவதே ஒழிய வேறில்லை என்று அனுமன் சொன்னவுடன் அனைவரும் பெருக்கென இராமபாணம்போல எழுந்துபோகிறுர்கள்.

நண்பகலில் மதுவனம் சென்று அடைகிறுர்கள். கிட்கிந்தை வேந்தன் சொல்லிய நாள் கடந்தமையால் ஏற்பட்ட துன்பம் நெஞ்சை வாட்ட, உணவு உண்ணுமல் பசித்து இருந்தனம் என்று தம்மைக் காத்த அனுமனிடம் வானரர் உரைத்துப் பசி நீங்க உணவு தந்தருள வேண்டு மென்று வேண்டுகிறுர்கள். முன்னர் அனுமனின் பசி களைந் தவர்கள் இப்பொழுது அனுமனிடமே உணவு வேண்டுவது ஈண்டு நோக்கத்தக்கது! அவனும் அவர்களை அங்கதனிடம் அழைத்துச் செல்கிறுன். வானரப் படைக்குத் தாகம் நீங்க மது வழங்குமாறு அங்கதனை வணங்குகிறுர்கள். அவனும்

97 சுந்தர-இலங்கை எரியூட்டுப்-1260

இசையவே வானரப் படையினர் மதுவனத்துள் புகுந்து தேனை மாந்திக் களிக்கின்றனர். மதுவனச் சோலைத் தலைவன் ததிமுகன் மதுவனத்தை அழித்த வானரரை வெகுண்டு நோக்கி வெருட்ட எண்ணுகிறான். இரண்டு கோடி வானரப் படையுடன் வந்த ததிமுகன் அங்கதனை நோக்கி "இந்திரன் வாலிக்குக் கொடுத்த சுவைகொண்ட மதுவை உடையது இவ்வனம்; தேவர்க்குப் பார்ப்பதற்கும் அரியது. என் ஆணையை மீறினீர். சுக்கிரீவனின் ஆற்றலை அறியீரோ? அழிவீர்" என்று கூறிப் போருக்கு அழைக்கிறான். இருவரும் கடும்போர் புரிகிறார்கள். இரு பக்கத்து வானரரும் பெரும் போரில் ஈடுபடுகிறார்கள். அங்கதன் ததிமுகனை அடித்துச் சுக்கிரீவனிடம் முறையிடுமாறு விரட்டுகிறான்!

இதற்கிடையே கிட்கிந்தை அருகே உள்ள இராமன் சீதையின் பிரிவால் வருந்தவே, சுக்கிரீவன் வானர வீரர் வெற்றியுடன் வருவர் என ஆறுதல் கூறுகிறான். தென் திசைக்கண் சென்ற அனுமன், வினை முடித்து வெற்றியுடன் மீள்வான் என்ற நம்பிக்கையால் இராமனின் உயிர் அகத்தே தங்கியிருக்கிறதாம். [98] "திண்டிற றனுமனை நினையுஞ் சிந்தனையான்" எனக் கம்பர் இராமனின் மனவோட்டத்தை அறிந்து கூறுகிறார்! தென்திசை சென்ற வானரர்க்கு இடுக்கண் ஏதும் விளைந்ததோ என்று சுக்கிரீவனிடம் இராமன் பேசிக் கொண்டு இருக்கும்பொழுது ததிமுகன் வந்து குறையினைக் கூறுகிறான். அங்கதன் மதுவனத்தை அழித்தான் என்ற செய்தியில் மறைந்திருக்கும் உண்மை நிலையினைச் சுக்கிரீவன் அறிந்து இராமனிடம் அறிவிக்கிறான். பிராட்டியின் கற்பு நிலையினை அறிந்த ஆனந்தத்தின் விளைவே மதுவனம் அங்கதனால் அழிக்கப்பட்டதற்குக் காரணம் என்கிறான்! அங்கதனின் குணநலத்தைத் ததிமுகனுக்குக் கூறி அவனைத் திரும்பிச் சென்று அங்கதனிடம் சரணடையச் சொல்கிறான். ததிமுகன் திரும்பி வரக்கண்ட அங்கதன், அவன் மூலம்கேட்டு அனைத்தும் அறிகிறான். தாமரைக்கண்ணனின் துன்பத்தை

---

98 சுந்தர-இலங்கை எரியூட்டுப்-1280

நீக்க அனுமனை இராமன் பக்கம் அங்கதன் அனுப்ப அவனும் வணங்கிச் செல்கிறான்.

## 21. [99] புகழொடும் ஓங்க நிற்பான்

''சுக்கிரீவா! மதுவனத்தில் இருந்து வரும் வானரர் என்ன செய்தி கொண்டு வருவார்களோ? சீதையைக் கண்டிருப்பரோ? அவ்வாறு கண்ட சீதையும் கற்புநிலை தவறுதவளாய் இருப்பாளோ? அல்லது ...''

சுக்கிரீவன் இராமனை நோக்கிப் பதில் சொல்வதற்குள் தென்திசையில் ஆதவன் எழுந்தாற்போல் அனுமன் பறந்து வருவதை நாயகன் நோக்குகிறான். வந்த அனுமன் இராமனின் திருவடியில் வீழ்ந்து வணங்கினனா? இல்லை. தென்திசை நோக்கி இருகரம் கூப்பி வணங்குகிறானே! ஏன்? இராமனிடம் வாயால் கூறி விளக்குவதற்கு முன், தான் செய்ய வேண்டியதை நன்கு உணர்ந்த அனுமன் தான் வாய் விட்டுக் கூறுமலேயே இராமன் வினையின் பயனை உணருமாறு செய்து விடுகிறான். குறிப்பு உணர்வார் குறிப்பறிந்து செய்யும் செயலல்லவா!

[100] ''இவன் கண்டதும் உண்டு. அவள் கற்பும் நன்று'' என்று இராமன் மனம் மகிழ்கிறது! அனுமனின் உளமும் குளிர்கிறது!

[101] ''கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்'' என்கிறான். சொல்லின் செல்வன் வாக்கு எத்தனை தடவை படித்தாலும் இன்பம் தரவல்லது. எந்தச் சொல்லை முன் கூறவேண்டும். அதன்பின் அடுத்தடுத்துக் கூற வேண்டிய சொற்களை அவனைப்போல் அறிந்தார் யார்?

---

99 சுந்தர-திருவடிதொழுத-1331
100 சுந்தர-திருவடிதொழுத-1306
101 சுந்தர-திருவடிதொழுத-1308

சீதையை அனுமன் கண்டானா? இதுதானே இராமன் உள்ளத்தில் எழும் முதற் கேள்வி? ஆம். கண்டான். எப்படிப்பட்டவளைக் கண்டானோ? கற்புநெறி பிறழாத் தையலைத்தான் கண்டான். தானே கண்டதாகக் கூறி இராமனின் ஐயத்தை அறவே போக்குகிறான். எங்கே கண்டான் என்ற கேள்விக்கும் உரிய பதிலாக அலைகள் சூழும் இலங்கையில் கண்டதையும் கூறுகிறான். இராமன் மனம் மேலும் மகிழுமாறு பல செய்திகளை முறைப்படி அனுமன் கூறுகிறான்.

''ஐய! என் பெருந்தெய்வமாகிய சீதாதேவி உன் மனைவி என்னும் உரிமைக்கும், தயரதவேந்தனுக்கு மருமகள் என்ற சொல்லுக்கும், சனக வேந்தனின் மகள் என்ற தன்மைக்கும் உரியவளாய் விளங்குவதைக் கண்டேன். பொன்னுக்கு இணை பொன் என்னுமாப்போலே தனக்கு நிகர் தான் என்று சொல்லும் வண்ணம் தேவி இருக்கிறாள். உன்னை ஒத்தார் நீயே தவிர வேறு இலர் என்னும் புகழை உனக்குத் தந்ததோடு என்னை ஒத்தவர் யானலது வேறிலர் என்னும் பெருமையினை எனக்குத் தந்தாள்.

[102] ''விற்பெருந் தடந்தோள் வீரவீங்குநீ ரிலங்கை வெற்பின்
நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை
யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம்
புரியக் கண்டேன்''

''அறத்தின் நாயக! அவளுடைய கண்களிலும், கருத்திலும் நீயே உள்ளாய். அவள் உன்னைப் பிரிந்தாள் என்பது எவ்வாறு? [103] 'தவம் செய்த தவமாந் தையல்'. இலக்குவன்

---

102 சுந்தர-திருவடிதொழுத-1312
103 சுந்தர-திருவடிதொழுத-1314

புல்லினுல் தொடுத்த பர்ணசாலேயிலேயே இருக்கிருள். இவ்வாறு தேவியின் நிலேயினே அனுமன் கூறி வரும்பொழுது இராவணனுக்கு உற்ற சாபத்தையும் விளக்குகிருன். தேவியை அவன் தீண்டியிருப்பின் அண்டகோளம் வெடித் திருக்குமே! ஆதிசேடனின் ஆயிரம் தலேகள் பிளவுபட் டிருக்கும்; கடல்கள் கரையினேக் கடந்திருக்கும்; வேதமும் அழிந்திருக்கும். அவ்வாறு ஆகாததனுல் தேவியின் கற்பிற்கு மாசு ஏற்படவில்லே என்பதை உணரலாம் என்று கூறுகிருன். இதனுல் இந்திராணி, சரஸ்வதி, உமை, இலக்குமி போன்ருேர் புதியதொரு சிறப்பைப் பெறுகிருர்கள். அசோகவனத்தில் அவள் துயரமே உருவமாக வாழ இருக் கிருள். [104]'கண்ணினீர்க் கடலிற் கண்டேன்'.

''தலேவ! பிராட்டி உன்மேல் வைத்துள்ள காதலேக் கண்களால் காண்பதற்கு நீ பிறந்துள்ளதால் ஆண்மகனுய்த் தோன்றியதன் சிறப்பினே அடைகிருய்'' என்று கூறுகிருன்.

மேலும், இராவணன் சீதை உரையாடலேயும், தேவி யினுடைய கற்பின் கலங்கா நிலேயினேயும் எடுத்துக் கூறுகிருன். இராவணன் சென்ற பிறகு மாதவிப் பொதும் பரிடை ஏகி உயிரைப் போக்கிக்கொள்ள தேவி முயற்சி செய்தபோது, தான் சென்று தடுத்துச் செய்திகளேக் கூறித் தேற்றியதையும் விவரிக்கிருன். தான் கூறிய இராமநாமம், சீதைக்கு எத்துணே மகிழ்ச்சி அளித்தது என்பதையும் புலப் படுத்துகிருன். இராமன் தந்த மோதிரத்தைக் கொடுத்த போது அது தேவியின் விரகதாபத் தீயில் உருகியதையும், மகிழ்ச்சியால் ஏற்பட்ட குளிர்ச்சி உருகிய மோதிரத்தை இறுகுமாறு செய்தது என்பதையும் கூறுகிருன். தேவியின் இருப்பிடத்தை அறியாததே இராம இலக்குவர் வராத தற்குக் காரணம் என்பதையும் தெளிவுபடுத்துகிருன்.

---

*104 சுந்தர-திருவடிதொழுத-1318*

105 ''இங்குள தன்மை யெல்லா மியைபுழி
யியையக் கேட்டாள்
அங்குள தன்மை யெல்லா மடியனுக்
கறியச் சொன்னுள்
திங்களொன் றிருப்பெ னின்னுந் திருவுளந்
தீர்ந்த பின்னே
மங்குவெ னுயிரொ டென்றுன் குரைகழற்
றலைக்கண் வைத்தாள்''

என்பதையும் இராமனிடம் அனுமன் தெரிவிக்கிருன். சீதை தந்த சூடாமணியை அவனிடம் சேர்ப்பிக்கிருன். இராமனுக்கு அச்சூடாமணி சீதையின் கைபோல விளங்கி மகிழ்ச்சி அளிக்கிறதாம். அப்பொழுது இராமன் இருந்த நிலையினைக் கம்பர்

106பொடித்தன வுரோமம் போந்து பொழிந்தன
கண்ணீர் பொங்கித்
துடித்தன மார்புந் தோளும் தோன்றின
வியர்வின் றுள்ளி
மடுத்தது மணிவா யாவி வருவது போவ தாகித்
தடித்தது மேனி யென்னே யாருளர்
தன்மை தேர்வார்''

என்று நவில்கிருர்.

அங்கதன் சாம்பன் வானரப் படையுடன் வருகிருர்கள். 107 'தேவி காண்டற்கு எளியலானுள்' என்று சுக்கிரீவன் கூறி மகிழ்கிருன். இனியும் காலம் தாழ்த்துவது முறையன்று என்று இராமன் கூறவும், சுக்கிரீவன் 'வானரப்படை உடனே புறப்படுக' என்று ஆணையிடுகிருன். எழுபது வெள்ள வானரப்படை திரண்டு எழுந்து தென்திசை நோக்கிச்

---

*105 சுந்தர-திருவடிதொழுத-1330*
*106 சுந்தர-திருவடிதொழுத-1332*
*107 சுந்தர-திருவடிதொழுத-1335*

செல்கிறது. அனுமன், அங்கதன் தோள்களில் அவர்கள் வேண்டியதால் இராம இலக்குவர் முறையே ஏறி அமர் கிறார்கள். அப்பொழுது அனுமன் அங்கதன் கருடன், எருதுபோலவும் அவர்கள் மேல் அமர்ந்திருக்கும் இராம இலக்குவர் அரி, அரன் போலவும் விளங்கத் தேவர்கள் மகிழ்ச்சியால் பூமாரி பொழிகிறார்கள். பன்னிரண்டு நாட் களில் அவர்கள் தென்கடற்கரை வந்தடைகிறார்கள்.

## 22. [108]சுருங்கிய குரங்கு

தெய்வத்தச்சன் மயன், பிரமனுடன் சேர்ந்து அனுமனால் எரியுண்ட இலங்கை நகரை மூன்று உலகங்களிலும் இதைப் போல் அழகுடையது இல்லை என்னும்படி அழகுடன் திகழு மாறு செய்கிறான். இதனால் இராவணன் சீற்றம் தணிந்து உவகை கொள்கிறான். மயனுக்கு வேண்டியன கொடுத்துப் பிரமனுக்கு வழிபாடு செய்து விடை கொடுக்கிறான்.

முனிவர், தேவர், மகளிர், இளைஞர் நீங்கியதும் அவையில் இராவணன் மந்திரச் சுற்றத்துடன் இலங்கை நகருக்கு உற்ற கேட்டினை ஆராய்கிறான். ஒரு குரங்கினால் தன்னாட்சியின் பெருமை குலைந்துவிட்டதே என்று பெரிதும் வருந்துகிறான்.

[109]''சுட்டது குரங்கெரி சூறை யாடிடக்
கெட்டது கொடிநகர் கிளையும் நண்பரும்
பட்டனர் பரிபவம் பரந்த தெங்கணும்
இட்டவிவ் வரியணை யிருந்த தென்னுடல்''

என்றும் புலம்புகிறான். ''அனுமன் வைத்த நெருப்பு இன்னும் தணியவில்லை. கிணறுகளில் உதிரம் ஊறுகிறது!

---

108 யுத்த-I இராவணன் மந்திரப்-74
109 யுத்த-I இராவணன் மந்திரப்-24

அகிற்புகை கமழும் மகளிர் கூந்தலில் நெருப்பின் மணம் வீசுகிறது! நம்மோடு போர் புரிந்த வானரமானது இறந்தது என்ற சொல்லைக் கேட்டோமா? இனி முடிக்க வேண்டிய செயல் என்னவோ?''

''குலங்கெழுகாவலா! நாம் நம் பகைவரைக் கொல்லா விடின், குரங்கு மட்டுமென்ன, ஒரு கொசுவும் நம்மை ஒழிக்குமே'' என்கிறான் சேனை காவலன்.

''ஆற்றலாய்! ஒரு சிறு கிளையில் உறையும் குரங்கின் தோளாற்றலுக்கு நம் வலிமை குறைந்ததோ? வெள்ளியங் கிரியினை எடுத்த வீரனே! நமக்குக் குறை வந்துள்ளது என்ற எண்ணத்தை விடுத்து என்னை ஏவினால் குரங்கினத்தை மட்டுமா அழிப்பேன்; இராம இலக்குவரின் உயிரினையும் குடித்து மீள்வனே'' என்று வீரமொழி கூறுகிறான் மகோதரன்.

110''போயினி மனிதரைக் குரங்கைப் பூமியில்
தேயுமின் கைகளால் தின்மினென் றெமை
ஏயினை யிருக்குவ தன்றி யென்னினி
ஆயுமி தெம்வயி னயிர்ப்புண் டாங்கொலோ''

என்று வச்சிரதந்தன் திருவாய் மலர்கிறான். ''நமக்கு உணவாகும் மக்களும் குரங்கும் வலியர் என்றால் இலங்கை வேந்தன் ஆற்றல் என்னும்?''

111''வருவதுங் குரங்குநம் வாழ்க்கை யூர்கடந்
தரிதுகொ லிராக்கதர்க் காழி நீந்துதல்''

என்று துன்முகன் வினவுகிறான்.

''மானிடர் ஏவுவது; குரங்கு வந்து வாலாட்டுவது; நாமெல்லாம் அழுங்குவது; இஃது என்னை?'' என்று எள்ளல் குறிப்புடன் பேசுகிறான் மாபெரும் பக்கன்.

---

*110 யுத்த-I இராவணன் மந்திரப்-33*
*111 யுத்த-I இராவணன் மந்திரப்-47*

இவ்வாறு அவையில் எளிமையுடைய குரங்கிற்கு வலிமை இழந்து அரக்கர் பேசலாகாது என்று தம் தம் கருத்துக்களைத் தெரிவிக்கிறார்கள்.

கடல் கடந்து சென்று நரர், வானரர் வேரற வெல்லுவதே இனிச் செய்யும் தொழிலாம் என்று கும்பகர்ணன் மொழிகிறான்.

''என் செயலால் குரங்குகள் அழியும்; மானிடர் துயருறுவர்; சீதை துயரில் மாழ்குவள்; இராம இலக்குவர் தலைகள் கொய்யப்படும் காண்பாயாக'' என்று வீரமொழி பகர்கிறான் இந்திரசித்து.

''அண்ணா! சானகியின் கற்பினால் இந்நகர் வெந்ததே ஒழிய ஒரு குரங்கு சுட்டது என்று எண்ணலாமோ? அன்று கயிலையை நீ எடுத்த காலையில், நாலு தோள்களை உடைய நந்தி உனக்குக் குரங்கினால் கேடு உறும் என்று கொடுத்த சாபம் வாலியினால் விளைந்ததை எண்ணாயோ? இருவராக உள்ள இராம இலக்குவர்பால் நிற்கும் வானரர் தேவர் அல்லவோ! கற்பின் கனலியை உரியவனிடம் விடுவதே கருமம்'' என்று வீடணன் அறிவுரை கூறுகிறான்.

112 ''கூனமுது கின்சிறு குரங்கு'' என்று அரக்கரால் வருணிக்கப்பட்ட குரங்கு செய்த செயல் அரக்கர் அவையில் ஒரு பெரும் கலந்துரையாடலுக்குக் காரணமாயிற்று எனலாம்.

# 23. [113]செறி பெருங் கேள்வியன்

இராவணனிடம் இருந்து பிரிந்து வந்து அபயம்வேண்டும் வீடணனை ஏற்றுக்கொள்ளலாமா என்று இராமன் வினவிய

---

112 யுத்த-I இராவணன் மந்திரப்-75
113 யுத்த-I விபீடணன் அடைக்கலப்-392

தற்கு அனுமனைத் தவிர ஏனையோர் கூடாது என்பதற்கான காரணங்களைக் கூறினர். அனுமன் கருத்தையும் இராம பிரான் கேட்கிறான்.

114 "வணங்கிய சென்னியன், மறைத்த வாயினன், நுணங்கிய கேள்வியான்" என்று போற்றப்பெறும் அனுமன் தன் கருத்தினை விளக்கிக் கூறுகிறான். "சான்றீர்! சரணமடைபவர் யாவராயினும் அவரையும் ஏற்றுக்கொண்டு சிறப்புச் செய்வது உங்களுக்கு அழகன்றோ? அனைவரும் ஒரே கருத்தை வலியுறுத்திப் பேசியபின் யானும் கூற வேண்டுமோ? ஆழியாய்! வீடணன் என்னும் இவனைத் தீயன் என நான் ஐயுற மாட்டேன். ஒருவருடைய வஞ்சனையை அவர்தம் முகம் காட்டிடுமே. ஒருவரின் வஞ்சனையைப் பிறர் அறியாமல் அவர் முகம் மறைக்க முடியுமோ? இருள் என்பது பள்ளத்தில் தங்கும். அதுபோல வஞ்சனையும் மனதில் இருக்கும். எனினும் முகம் காட்டிவிடும். வாலியை வென்று சுக்கிரீவனுக்கு அரசாட்சி நல்கிய வீரத்தைக் கண்டு மேலரசு எய்துவான் விரும்பி இவண் மேயினன். அரக்கரின் அரசு, சீரியோர் கூறும் நெறி நில்லா என்பதனை நன்கு உணர்ந்து கொண்ட வீடணன், தம்பிக்குத் தன்னாட்சி நல்கியவனின் கருணையை வேண்டி நிற்கிறான் என்பது மெய்யே. இவன் வந்தகாலம் சரியில்லை என்று எண்ணலாம். ஆனால் வாலியை நீ கொன்றதால், இராவணனுக்கும் அவ்வழிவு ஏற்படுத்தும் ஆற்றல் உடைய பரம்பொருள் என்றெண்ணியே உன்னைச் சரணடைந்துள்ளான் என்று கொள்ளலாமே! தலைவ மாயத்தில் வல்ல அரக்கரை வீழ்த்த மாயம் தெரிந்த வீடணன் போன்றோர் நம் பக்கம் வருவது நமக்கு நன்மை அளிக்கும் என்றே நான் எண்ணுகிறேன். மற்ற அரக்கரைப் போல இவரையும் நாம் எண்ணித் தயங்கத் தேவையில்லை. என்னை இராவணன் கொல்ல ஆணையிட்டபோது தூதரைக் கொல்லுதல் அரச நீதியாகாது என்று கூறியவன் இவன் ஒருவனே. மேலும் அச்செயல் மாதரையும், கோழையையும்

---

114 யுத்த-I விபீடணன் அடைக்கலப்-393

கொல்வதற்கு ஒக்கும் என்றும் கூறினன். தேவியைத் தேடி இரவில் நான் சென்றபோதில் நன்னிமித்தங்கள் தோன்றின. இவனுடைய மனே தானமும் நீதியும் சிறக்கும் அந்தணர் இல்லமெனத் திகழ்ந்ததைக் கண்டேன். இவனுடைய மகள் திரிசடை அசோகவனத்தில் சீதைக்கு உற்ற தோழியாய் இருந்ததையும் நோக்கினேன். இராவணனின் வரம் உன் சாபத்தின் முன் நிற்குமோ? அவர்தம் மாயமும், தீச் செயலும் உன்னுடைய நெருப்புக்கணை பட்டு அழியுமே! அறிவுடைய வீடணன் இவற்றை எல்லாம் எண்ணியே ஈண்டு வந்துள்ளான். தேவர்க்கும் மூவர்க்கும் ஏன் யாவர்க்கும் முடித்தற்கரிய செயலை முடிப்பான் வேண்டி அவதரித் துள்ளாய் என்பதைத் தெரிந்துள்ளான். இவனை ஐயுறுவது கூவத்தின் சிறு புனலைக் கடல், ஆபத்து தனக்கு வரும் என்று ஐயம் கொள்வது போலாகாதோ? இவன் பகைவர் இனத் தைச் சார்ந்தவன் என்ற ஒரே காரணத்திற்காக ஏற்றுக் கொள்ளக்கூடாது என்று முடிவு செய்வது அரச நீதியாகாது. மேலும் ஒரு பொருளுக்காகத் தமக்குத் தாம் போராடும் ஒரே இனத்தவரைக் காணவில்லையா? ஆதலால் இவன் வரவு நல்வரவு என்றே எண்ணுகிறேன். உன் திருவுள்ளக் குறிப்பு அறியும் திறனல்லேன்'' என்று வேத சாத்திரங் களைச் சூரியன் முன் ஓதியவனும், கடல் கடந்த வீரனுமான அனுமன் தன் கருத்தினைப் பணிவன்போடு தெரிவிக்கிறுன்.

மாருதியின் வார்த்தை அமுதம்போல் இருக்க அறத்தின் நாயகன் அள்ளிப் பருகுகிறுன்! [115] ''அனும! நின் வார்த்தை நன்று நன்று'' என்று இராமன் பாராட்டுகிறுன்.

## 24. [116] ''பேரறிவாளன்

அரக்கர் குலம் பற்றிய செய்திகளை வீடணன் இராம னுக்கு விரிவாக எடுத்துச் சொல்கிறுன். அனுமன்

---

115 யுத்த-I விபீடணன் அடைக்கலப்-412
116 யுத்த-I விபீடணன் அடைக்கலப்-412

இலங்கையை அழித்தவிதம் குறித்தும் வியந்து கூறுகிருன். அரக்கரைத் துரத்திய அனுமனை ஆடுகளைத் துரத்தும் புலிக்கு உவமித்துக் கூறுகிருன். அக்ககுமாரனைக் குருதி ஒழுக அனுமன் இழுத்துச் சென்றதன் கறை இன்னும் உலரவில்லை. அனுமன் இலங்கையை எரியூட்டியதால் இலங்கை வேந்தன் இலங்கையில் இல்லாமல் ஏழு நாள் ஆகாயத்திலேயே இருந்தானே ! இவ்வாறு வீடணன் கூறிவருகையில் தன் வருகைக்குக் காரணம், கரன், வாலி, போன்ருேரை இராமன் அழித்ததை எண்ணியன்று. அரக்கர்களை அழித்த அனுமனைத் தொண்டனுக உடைய இராமன் சிறந்த ஆண்டகையாக இருக்கவேண்டும் என்று எண்ணியே வந்ததாகக் கூறுகிருன்.

வீடணன் உரையினைச் செவிமடுத்த இராமபிரான், அதனுல் தோள்கள் வீங்கத் தன் தூதனைப் பார்த்துக் கூறுகிருன்.

''பேரறிவாள! அரக்கர் படையில் உள்ளோரை ஒரே நாளில் பாதிப்பேர்களைக் கொன்று ஒழித்தாய். இலங்கையையும் எரித்த நீ அங்குச் செய்யவேண்டிய செயல் ஏது? சீதையை நீ கொண்டு வராதது என் வில்லின் ஆற்றலை உலகோர் அறிவதற்குத்தானே? நீ தனியனுய்ச் செய்த செயலுக்கு முன் நாங்கள் அனைவரும் கூடிச் செய்யப்போகும் செயல் ஈடாகுமோ? அதனுல் எமக்குப் புகழுண்டாகுமோ? நல்வினையே ஓர் உருவமாக வடிவெடுத்ததுபோல் இருக்கின்ருய். என் வலிமையையும், இராவணனது வலிமையையும் உன் வெற்றியால் உனக்கு அடங்குமாறு செய்தனை. மூவகை உலகத்தையும் படைக்கும் தொழிலை உடைய பிரமனுக்கு ஏற்பட்டுள்ள பதவி இப்பிறவிக்குப் பின் உனக்கெனத் தந்துள்ளேன். நீ அதனை உறுதியாகப் பெறுவாய்'', என்று வாழ்த்துகிருன்.

சான்ருேர் புகழுமுன் நாணுப என்பதற்கேற்ப, இராமனின் பாராட்டு உரையைக் கேட்ட அனுமன், மண்ணுற வீழ்ந்து ஒன்றும் பேசாமல் நாணிக் கோணி நிற்கிருன்.

இராமனின் வாழ்த்துரையைக் கேட்ட வானரரும், சுக்கிரீவனும் வீடு பேறடைந்தவர்போல மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கிருர்கள்.

## 25. [117]காலனை ஒக்கும் தூதன்

தென்கடலில் அணைகட்டும் பணியில் வானரர் ஈடுபடுகின்றனர். இராமதூதன் எறிந்த ஒரு மலையால் எழுந்த கடல் நீருடன் மீன்களும் வானுலகம் சேர்ந்தனவாம்! மருத்தின் மைந்தனின் நெடுந்தோள் என்று சொல்லும் வண்ணம் விளங்கும் ஒரு மலையினைச் சாம்பன் கடலில் எறிய அந்நீர் வானவர் தலையில் வீழ்ந்ததாம். இவ்வாறு வானரர் நளன் தலைமையில் இலங்கை சென்றடைய மூன்று பகற் பொழுதில் அணை ஒன்று கட்டி முடிக்கிருர்கள். வானரரின் ஆரவாரம் விண்ணைப் பிளக்கிறதாம்! நூறு யோசனை நீளமும், பத்து யோசனை அகலமும் கொண்ட அவ்வணை வழியாக வானர வீரர்களுடன் இராம இலக்குவர் கடல்கடந்து இலங்கை அடைகிருர்கள். மாலியவான் கூறியபடி, அரக்சரை வேரோடு அழிப்பதற்காகப் பிரமபதத்தை அனுமனுக்குக் கொடுத்த இராமன் பின் வந்த வானரர், தனித் தனித் தேவரேயாவர்.

சேனை காவலன் என்னும் அரக்கன் இராவணனைச் சிங்கம் என்றும், வானரரை நாய்கள் என்றும் கூறியதை எண்ணி அவன் தன்னைச் சிங்கம் என்றும், வானரர் மான்கள் என்றும் எள்ளி நகையாடுகிருன்.

அரக்கரோடு வானரர் போரிட்டுக் கொல்கிருர்கள். இலங்கையின் மேற்குப் பக்க வாயிலில் நூற்றிரண்டு

---

117 யுத்த-I இலங்கைகாண்-766

வெள்ளம் சேனையுடன் வந்த அரக்கன் துன்முகனை அனுமன் எமன் போல வீழ்த்துகிறான்.

இராவணனோடு போரிட்ட சுக்கிரீவன் அவன் கணை பட்டுச் சிறிது துளங்குகிறான். அதற்குள் அனுமன் சுக்கிரீ வனுக்கு முன் தோன்றி இராவணனோடு போர்புரிய முற்படு கிறான். ''பருவலி அரக்க! சூரியன் சேய் மீண்டும் போர் புரியுமுன், என்னோடு நீ பல்வகைப் போரைச் செய்வாயோ?'' என்று இகழ்ந்துகூறி ஒரு மலையை வேதத்தை ஒத்த தன் தோளாற்றலினால் இராவணன் மீது எறிகிறான். அனுமன் எறிந்த மலையை இலங்கை வேந்தன் பத்துக்கணைகளால் ஆயிரம் துண்டுகளாகச் சிதைக்கிறான். பின்னர் அனுமன் எறிந்த மலை ஒன்று இராவணனின் தோள் வளையத்தைப் பொடியாக்குகிறது.

இராவணன், தன் மெய்யும் எரியுமாறு சினந்து மலையைப் பெயர்க்கும் அனுமன் மீது பத்துக் கணைகளை எய்கிறான். அவை அனுமனுடைய கை, தோள், மார்பு என்பவற்றைத் துளைக்கின்றன. அவ்வாறு தாங்கவல்ல ஆற்றல் அனுமனைத் தவிர வேறு யாருக்கு உண்டு என்று தேவர் வியப்பு அடை கிறார்கள். எனினும் மனம் தளரா மாருதி மராமரம் ஒன்றால் அரக்கனின் தேரோட்டியின் தலையைச் சாய்க்கிறான். வேறு ஒரு சாரதி ஓட்டும் தேரில் நின்ற இராவணன் சினங் கொண்டு நூறு அம்புகளை அனுமன் மீது எய்ய அவனும் ஆறுபோல் குருதி சிந்தத் துன்பம் அடைகிறான். அரக்கர் கோன் வானரரை ஏளனம் செய்கிறான்.

பின்னர் இராவணனோடு இலக்குவன் கடும் போர் புரி கிறான். அவன் விடுத்த அம்புகளை இலங்கை அரசன் அம்பு களால் அறுக்கிறான். அம்புப் புட்டிலையும் அரக்கன் வீழ்த்து கிறான். அப்பொழுது அனுமன் அயர்ச்சி நீங்கி, யானை போல நடந்து நெருப்பு எழ இராவணனை நோக்கிப் பொய்ப் போர் புரிய வேண்டாம் என்று கூறுகிறான். உலகளந்தான் போலப் பெரிய உருவத்துடன் அனுமன் தோன்றுகிறான்.

“இலங்கைக் கோனே! மூன்று உலகங்களையும், இந்திரனையும் வென்றாய் என்றாலும் இன்று உனக்கு அழிவு நேரும் என்பது உணர்வாயாக!” என்று கூறித் தன் வலக் கையைத் தூக்கிக் காட்டுகிறான். அக்கை உலகமெல்லாம் சென்று நிற்கிறதாம்.

“இராவணா! இருபது கைகளுடன் பல்வேறு படைக் கலன்களைக் கொண்டு கடும் போர் புரிபவனே! என் கையாற்றலுக்கு முன் எதிர்நிற்க வல்லையோ? மறவோய்! உன் ஆற்றல் முழுவதையும் ஒரே குத்தினால் அழிப்பேன். இனிப் பலபடியாகப் பேசிப் பயன் என்ன? கைலைக்கும், திசையானைகளுக்கும் பின்னிடாத உரனுடைய நீ, ஒரு குரங்கின் கைவலிமைக்கு முன் நிற்கும் ஆற்றல் பெறு வையோ? என் தோள் வலிமையால் யான் குத்த இறவாமல் நீ நிற்பாய் என்றால், நீ ஆற்றலுடன் என்னைக் குத்துவாய். அப்பொழுது நான் இறவேன் என்றாலும் நின்னொடு எதிர்ந்து பொரேன்” என்று சூளுரைக்கிறான்.

இதனைக் கேட்ட இராவணன் மகிழ்ந்து, “வீரர்க்கு உற்றதை மொழிந்தாய். என் எதிர்நிற்க வல்லார் உன்னைத் தவிர வேறு யார் உளர்? உன் புகழ் உலகு உள்ளளவும் நிற்குமே. அனும! உன் உடலையே நம்பி, நீ படைக்கலம் ஏதுமின்றிப் போரிடும் ஆற்றலைக் கண்டேன். எம்மவரைக் கொன்றாய். என்னை எதிர்க்கும் திறம் பெற்றாய். உன்னை ஒத்தவர் உலகில் உள்ளார் யாரே? முத்தேவரில் பித்தேறி னிவர் தவிர, எத்தேவர் என்னை எதிர்க்கத் துணிந்தனர்? மார்பிற்குத்து என்று எதிர்நிற்கும் துணிச்சல் உன்னைத் தவிர வேறு யாருக்கு உண்டு! இருபது தோள்களும் உலகங்களை வென்ற புகழும் உடைய என்னை நோக்கி வீர உரை பகர் கிறாய். இரு கைகளை மட்டும் உடையாய்; உன்னோடு போர் புரிவது தக்கதன்று. என் புகழ் எல்லாம் மாயும்படிச் செயல் புரிந்தனை. என் மகன் அக்ககுமாரனைக் கொன்றாய். அவன் உடலில் இருந்து பெருகிய இரத்தம் இன்னும் உலரவில்லையே! குரங்காகிய நீ போர் புரிந்தபோது தலையிடாமல் நின்றேன்.

நீ இப்பொழுது வீரவுரை பகர்வது இயல்பே. உலகோர் காணும்படி என் மார்பில் நீ குத்துவாய்'' என்று கூறி இராவணன் அனுமன் எதிர் நிற்கிறான்.

அனுமன் தன் கையை ஓங்கி இராவணன் மார்பில் குத்துகிறான். அனுமனின் குத்தின் விசையால் மலைகள் பொடியாகின்றன, இராவணன் கண்களிலிருந்து நெருப்புப் பொறிகள் பறக்கின்றன. மூளைகள் தயிரெனச் சிந்து கின்றன. அரக்கர் உயிர்கள் பிரிகின்றன. வானரங்களின் மயிர், பற்கள் ஆகியன நிலத்தில் உகுகின்றன. விண்ணில் மழைத்துளிகள் சிதறுகின்றன. வில்லில் இருந்து அம்புகள் பறக்கின்றன. கடல் நீர் கரை கடக்கிறது. இரு சுடர்களும் கதிர்களைச் சிந்துகின்றன. யானைகளின் தந்தங்கள் ஒடி கின்றன. படைக்கலங்கள் மண்ணில் வீழ்கின்றன. இராவண னுடைய மார்பில் தங்கிய திசையானைகளின் மருப்புக்கள் அவனுடைய புகழ்போல முதுகின் வழியே செல்கின்றன. அவனுடைய மார்புக் கவசத்து மணிகள் திசைகளில் வீழ்ந்து விண்மீன்கள் போல ஒளி உமிழ்கின்றன. இராவணனும் மூச்சு ஒடுங்கித் தள்ளாடிய வடமேருவைப் போலச் சலிக்கிறான் என்று கவிஞர் தமக்கே உரித்தான முறையில் விளக்கிச் செல்கிறார்!

தேவர்கள் அனுமனை வாழ்த்தி மலர்மாரி பொழி கிறார்கள். அரக்கர்களோ உடல் வேர்க்கிறார்கள். வானரர் அனுமன் இராவணனை அழித்தான் என்று உடல் மயிர் சிலிர்க்கிறார்களாம். இராவணன் மூர்ச்சை தெளிந்து உடல் விட்டுச் சென்ற யோகியர் மீண்டும் தம்முடலில் புகுவது போல, எழுச்சியுறுகிறான்.

118 ''வலியென்பது முளதேயது நின்பாலது மறவோய்
அலியென்பர் புறநின்றவ ருலகேழையு மடர்த்தாய்
சலியென்றெதிர் மலரோனுரை தந்தாலிறை சலியேன்
மெலிவென்பது முணர்ந்தேனெனை
வென்றாயினி விறலோய்''

---

118 யுத்த-I முதற்போர்புரி-1143

''வீர! என் குத்தினைத் தாங்கி உயிர் கொண்டு பேசினை. எனவே என்னை வென்றவனுவாய். உன் நிலை நன்று, நன்று. உன் கடனைப் பெற்றுக்கொள்'' என்று அனுமன் இராவணனின் வீரத்தை வியந்து கூறி அவன் குத்து மாறு எதிர் நிற்கிறுன். இராவணன் அனுமனின் மார்பில் ஓங்கிக் குத்த அவனும் அரக்கன் எடுத்த காலையில் தளர்ந்த வெள்ளிமலை போலத் தளர்கிறுன். அனுமன் மட்டுமா சலிக்கிறுன். தேவர் உலகம் சலிக்கிறது. அறம் சலிக்கிறது. உண்மை, நற்குணம், புகழ், சுருதி, கருணை, தவம் எல்லாம் சலிக்கின்றன!

பின்னர் நடந்த போரில் இராவணனின் வேல் இலக்கு வனின் மார்பில் பாய, அவன் தளர்கிறுன். இலக்குவனின் உடலை இராவணன் கவர்ந்து செல்ல முற்பட்டும் அவனுல் இலக்குவன் உடலைத் தூக்க முடியவில்லை. அனுமன் திடீரென அங்கு வந்து, [119] ''மகவு கொண்டுபோய் மரம்புகு மந்தியை''ப் போல, நட்பு என்னும் தனித் துணையினுலும், சிறந்த பக்தியினுலும் இலக்குவனை எடுத்து அப்பாற் செல் கிறுன். இலக்குவன் சிறு பொழுதில் தெளிவடைகிறுன். அனுமன் இராமன் இருப்பிடம் செல்கிறுன். இராமன் தரையில் நடந்து செல்வதைச் சிவனின் அம்சமாக விளங்கும் அனுமன் விரும்பாமல் தன் தோளின் மீது ஏறிக்கொள்ளு மாறு இராமபிரானை வேண்ட அவனும் இசைகிறுன். கன்று தாங்கிய தாயென மாருதி களிக்கிறுனும், குன்றின்மேல் ஏறிய சிங்கம்போல இராமன் தோன்றுகிறுனும்.

[120] ''வேதமொத்தனன் மாருதி வேதத்தின் சிரத்தின்
போதம் ஒத்தன னிராமன்வே றிதனில்லை பொருவே''

என்று கவிஞர் கூறுகிறுர்.

அனுமன் பெற்ற பேற்றைக் கண்டு கருடனும், ஆதி சேடனும் தமக்கு அத்தன்மை நீங்கியது குறித்து வெட்கமும்

119 யுத்த-I முதற்போர்புரி-1175
120 யுத்த-I முதற்போர்புரி-1181

நடுக்கமும் கொண்டனராம். இவ்வாறு அனுமன் தோளில் இராமன் நின்று செருக்களத்தில் அரக்கரையும், இராவணனையும் எதிர்த்துப் போரிடுகிறான்.

# 26. [121] அறத்தை ஓம்புவான்

அங்கதனும் கும்பகர்ணனும் போரிடுகிறார்கள். அங்கதன் எறிந்த வயிரத் துண்டு கும்பகர்ணன் மீது பட்டுப் பல துண்டமாகிறது. கும்பகர்ணன் தன்னைத் தூக்க முற்பட்ட வாலிசேயைத் தன் கையால் தாக்க அவனும் பூமி பிளவுபட மண்ணில் வீழ்கிறான். கும்பகர்ணன் அவன் மீது சூலத்தை எறிய அனுமன் ஒரு மலையை எறிந்து அரக்கனைத் தாக்கி இராமனைப் புகழ்ந்து ஆரவாரிக்கிறான். கும்பகர்ணனின் தலைமீது இன்னொரு தலை தோன்றியதோ என்று சொல்லும் வண்ணம் அனுமன் எறிந்த மலை வீழ்கிறதாம். அதனை அனுமன் மீது அவன் எறிந்து தோள் கொட்டி ஆர்க்கிறான்.

வானரர் அங்கதனைத் தூக்கிச் செல்ல, அனுமன் ஒரு பெரிய மலையினை எடுத்துத் தான் எறியும் அதனைத் தாங்க வல்லன் ஆகில் அவனோடு போர்புரிவதில்லை என்றும் புகழோடு நீடு வாழ்வான் என்றும் கும்பகர்ணனை நோக்கிக் கூறுகிறான். அதற்குக் கும்பகர்ணன் அனுமன் எறியும் மலைக்குச் சிறிது தளர்வுறினும் தோற்றதாகக் கருதுவதாகக் கூறுகிறான். அனுமன் எறிந்த மலையினைக் கும்பகர்ணன் ஏற்க அது நூறு பகுதியாய்ச் சிதறுகிறது. அனுமன் கும்பகர்ணனின் வலிமை அளவிடற்கரியது என்று புகழ்ந்து, அவனுடனே இராமனின் கணைகள் பிளக்குமேல் பிளக்கும் என்று எண்ணி அப்பாற் செல்கிறான்.

பின்னர் கும்பகர்ணன் இலக்குவனோடு போர் புரிய வருகிறான். தேரில் இருந்து அரக்கன் போர் புரிய இலக்குவன் தரையில் நின்று போர் புரிதல் தக்க

121 யுத்த-I கும்பகர்ணன் வதைப்-1478

தன்று என்று எண்ணிய அனுமன் தன் தோளில் அவனை ஏறும்படி வேண்டுகிறான். இலக்குவனும் இசைந்து அனுமனின் தோளில் நிற்கிறான். பொன்மயமான மேருமலை வெள்ளி மயமான கைலை மலைமீது விளங்குவது போல இலக்குவனும் அனுமனும் தோன்றுகிறார்களாம். அனுமன் தோளில் இருந்து இலக்குவன், கும்பகர்ணனுடன் போர்புரிகிறான்.

பின்னர் நடந்த போரில் கும்பகர்ணன் சுக்கிரீவன் மீது எறிந்த வேலை அனுமன் பிடித்து முறித்துப் போடுகிறான். அப்பொழுது எழுந்த ஓசை இராமன் சிவனின் வில்லை ஒடித்த காலையில் எழுந்த ஓசையை நிகர்க்கிறதாம்! அனுமனின் கையாற்றல் எண்ணுதற்கோ சொல்லுதற்கோ ஒண்ணாதது என்றும், அருஞ்செயல்களை முடிக்கும் ஆற்றல் உடையோன் என்றும் கும்பகர்ணன் அவனைப் புகழ்கிறான். தன்னைப் போருக்கு அழைத்த கும்பகர்ணனை நோக்கி, மீண்டும் தான் போர் புரிவதாயிருந்தால் முன் சொன்ன சொல் பிழைக்கும் என்று கூறி அனுமன் அவனுடன் போர்புரியாமல் வேறிடம் செல்கிறான். சுக்கிரீவனைக் கும்பகர்ணன் எடுத்துச் செல்லும் பொழுது அனுமன் தான் முன்னர் அளித்த வாக்குறுதியினால் கும்பகர்ணனோடு போரிட்டுச் சுக்கிரீவனைக் காப்பாற்ற முடியாமல் கைபிசைந்து அவன் பின், செய்வது அறியாது செல்கிறான். இராமன் கும்பகர்ணன் மீது அம்பு எய்ய அவன் மூர்ச்சை அடைகிறான். அப்பொழுது சுக்கிரீவன் உணர்வு பெற்று அரக்கனின் மூக்கு, காது ஆகியவற்றைக் கடித்து எடுத்து தன் இனத்தவரிடம் மீள்கிறான்.

பின்னர் நடந்த போரில் இலக்குவன் இராவணன் மகன் அதிகாயனோடு போர் புரிகிறான். அப்பொழுது அனுமன் ஒரு வீரச்செயலைச் செய்ய இலக்குவனின் வேலென ஆண்டு வருகிறான். இராவணன் ஏவலால் வந்த யானைப் படைகளை வெல்ல அனுமன் ஒரு மரத்தை ஏந்திய வண்ணம் நிற்கிறான். மலைமேல் விழும் இடிபோல அனுமனின் கையில் உள்ள மரம் யானைகளின் உயிரைக் குடிக்கிறது. அவற்றைத் தன் காலால், எயிறால், வாலால், நுதலால் பிறவற்றால்

அழிக்கிறான். பல யானைகளை இழுத்தும், பிளந்தும், வகிர்ந்தும், மூங்கில் போன்று இறுத்தும், பிளந்தும் அனுமன் அழிக்கிறான். சிலவற்றைக் கடலில் எறிந்தும், மரத்தால் தாக்கியும், பூமியில் தள்ளியும், உருட்டியும், மிதித்தும் கொல்கிறான். சில கரிகளை நஞ்சருந்திய சிவன்போல, வாயில் இட்டு அதுக்குவான். ஆயிரம் யானைகளை வெல்லும் ஒரு சிங்கம் போல ஒழிப்பான். பிறவற்றை வானுலகத்திற்கு அனுப்புவான். ஒரு கோடி யானைகளில் அனுமன் ஒரு நூறாயிரம் கொன்றான் எனலாம். எஞ்சியவற்றை இலக்குவன் கணைகளால் வீழ்த்துகிறான்.

தேவாந்தகன் என்னும் அரக்கன் தேரேறிவந்து சூரியனை ஒப்பனவாகிய கணைகளை அனுமன் உடலில் எய்கிறான். அனுமன் எறிந்த மரத்தை அவன் நெருப்புக் கணையால் இரு துண்டாக்குகிறான். தான் எறிந்த மலையையும் வீழ்த்திய அரக்கனின் நெடிய வில்லைப் பருந்து போலப் பாய்ந்து அனுமன் பறித்து விடுகிறான். தேவாந்தகன் சினத்துடன் ஒரு தோமரத்தால் அனுமனின் இடது தோளைத் தாக்கி ஆர்க்கிறான். இக்காட்சியினை இமையோர் வியப்புடன் நோக்குகிறார்கள். கொதித்த அனுமன் உருமேறுஎன் ஆர்த்து அத் தோமரத்தைப் பறித்துப் புடைக்கிறான். தேருடனே நெடுஞ்சாரதியும் மண்ணில் புரள்கிறான். வானவர் முகம் மலர்கிறார்கள். மேலும் தேவாந்தகனின் கதுப்பின் மூல பாகத்திலே புடைத்துச் சிரத்தை மடித்து உயிரை முடிக்கிறான்.

அப்பொழுது அங்கு வந்த இராவணன் மகன் அதிகாயன் அனுமனைக் கொன்றிட வேண்டுமென்ற சீற்றத்துடன் அவனருகில் தேரில் விரைந்து வருகிறான்.

''அனும! தேய்த்தாய் என் தம்பியை! தேவாந்தகனையும் உயிரிழக்கச் செய்தாய்! அன்று கடல் கடந்து உய்ந்தாய். இன்று உன் முடிவு என்னால் நிகழும். இன்று உன்னைக்

கொல்லவில்லை என்றால் என்று நான் உன்னை எதிர்ப்பேன்! பல தவறுகளைச் செய்துள்ளாய். உன்னையும் இலக்குவனையும் உயிரோடு திரும்பிச் செல்லவிடேன்'' என்று மறித்துக் கூறுகிறான்.

[122]''பிழையாதது பிழையாதெனப்
பெருங்கைத்தலம் பிணையா
மழையாமெனச் சிரித்தான்வட மலையாமெனு நிலையான்
முழைவாளரி யனையானையும் எனையும்மிக முனிந்தாய்
அழையாய்திரி சிரத்தோனையும் நிலத்தோடு
மிட்டரைப்பான்''

என்று அனுமன் ஏளனமாக அதிகாயனை நோக்கிக் கூறுகிறான். அதிகாயனோடு திரிசிரசும் வந்தால் இருவரையும் தரையில் தேய்த்துக் கொல்வதாக அனுமன் அச்சுறுத்து கிறான். மூன்று தலைகளை உடைய திரிசிரசும், அதிகாயனுடன் சேர்ந்து போர் புரிய வருகிறான். காமங்கொண்ட கல்லாத அரக்கர் இரண்டுமற்ற தன்னோடு போர் புரிந்து வெல்வது இயலுமோ என்று கூறிப் போரிடுகிறான். அனுமன் தேரின் மேல் இருந்த திரிசிரசைப் பிடித்து மண்ணில் தேய்த்துக் கொன்று மேற்றிசை வாயில் நோக்கிச் செல்கிறான்.

அனுமனின் வீரத்தைக் கண்டு வியந்த அதிகாயன், ''மாதொரு பாகனான சிவனும் இவன் எதிர்த்தால் எதிர்க்க வல்லனோ?'' என்று சினத்துடன் நடுங்கிய கைகளுடன் செயலற்றுப் புலம்புகிறான்.

# 27. [123]கூற்றன மாருதி

இராவணன் மகன் இந்திரசித்து பெருஞ் சீற்றத்துடன் இலக்குவனை அழித்து விடுவதாகச் சூளுரை செய்து போர்க் களம் புகுகிறான். வீடணன் இலக்குவனை நோக்கி, மாருதி,

122 யுத்த-I அதிகாயன்வதைப்-1852
123 யுத்த-I நாகபாசப்-2079

சாம்பன், சுக்கிரீவன், அங்கதன், நீலன் என்ற வானர வீரர்களின் துணையுடன் இந்திரசித்தை எதிர்க்கவேண்டுமென்று அறிவுரை கூறுகிறான். இந்திரசித்து இலக்குவனுடன் போரிட வந்துள்ளான் என்பதை அனுமன் அறிந்து சிறிது கவலையுடன் மேற்றிசை வாயிலில் இருந்து பெருங்காற்றென விரைந்து இலக்குவன் பக்கம் வருகிறான்.

அனுமனுடைய வைரக் குன்றுகள் என்னும்படி விளங்கும் கைகளால் மோதுண்டு அரைபட்ட அரக்கர்கள் கொணர்ந்த படைக்கலன்கள் எல்லாம் உருத் தெரியாமல் சிதைந்து குவிந்துள்ளனவாம்!

இந்திரசித்துடன் சுக்கிரீவன் போரிடுகிறான். அவன் எறிந்த மராமரத்தை இந்திரசித்து வீழ்த்தி, அவன் நெற்றியிலும், மார்பிலும் முறையே இரண்டு கணைகளையும், ஐந்து கணைகளையும் ஏவுகிறான். அப்பொழுது அனுமன் ஆலகாலம் எனப்படும் நஞ்சு போன்று மிக்க கோபங்கொண்டு ஒரு பெரிய மலையை யாவரும் அஞ்சும்படி இந்திரசித்தின் மீது எறிகிறான். ஆனால் அம்மலை தூள் தூளாகச் சிதறுகிறது.

124 ‘‘நில்ல டாசிறிது நில்ல டாவுனை நினைந்து வந்தனன்
முனைக்குநான்
வில்லெ டாமைநின தாண்மை பேசியுயி ரோடு
நின்றுவினை யாடினுய்
கல்ல டாநெடு மரங்க ளோவரு கருத்தி னேன்வலி
கடப்பவோ
சொல்ல டாவென வியம்பி னனிக லரக்க னையனிவை
சொல்லினன்’’

இப் பாடலில்தான் இந்திரசித்தின் கேலி மொழி எவ்வளவு அழகாக அமைந்துள்ளது! இதற்கு அனுமன் அளித்த தக்க பதிலுரையில் நகைச்சுவை கலந்த வீரமொழி மிளிரக் காணலாம்!

---

124 யுத்த-I நாகபாசப்-2025

125 "வில்லெ டுக்கவுரி யார்கள் வெய்யசில வீர் ரிங்குமுள்ர்
மெல்லியோய்
தல்லெ டுக்கவுரி யானு நின்றன னதின்று நாளையிடை
காணலாம்
எல்லெ டுத்துபடை யிந்திராதிய ருனக் கிடைந்
துயிர்கொ டோகுவர்
புல்லெ டுத்தவர்க ளல்லம் வேறுசில பேரெ டுத்தெதிர்
"புகுந்துளேம்"

"வில்லெடுத்துப் போரிட வீரர் இங்கும் உண்டு. நீ இறந்தால் உனக்குக் கல்லெடுக்க (இறுதிச் சடங்கு) உரியான் (விடணன்) உளன்! உன்னைக் கல்லால் எறிந்து கொல்ல உரிய, யானும் உள்ளேன்" என்று சிலேடை மொழியால் பேசும் அனுமனின் நாவின்மை அறிந்து இன்புறற்குரியது. மெல்லியோய் என்ற அடைமொழியால் இந்திரனை வென்ற ஆண்மை எல்லாம் தகர்தவனுக்கு (இராவணனுக்கு)த் துணை நின்ற காரணத்தால் விளுகும் என்பதை அழகாக எடுத்து இயம்புகிறுன்: "இந்திரன் போலத் தோற்று ஓடுபவர் அல்லோம்; எதிர் நின்று போர் புரியவே வந்துள்ளோம்" என்று அனுமன் இந்திரசித்தை நோக்கிக் கூறுகிறுன்.

"மேகநாதா! நீ என்னுடனு, இலக்குவனுடனு, இராம பிரானுடனு போர் புரியப் போகிறுய்? உன் விருப்பம்போல் நாங்கள் உன்னை எதிர்ப்போம்! என்று அனுமன் மொழிகிறுன்.

"அனும! என் தம்பி அதிகாயனைக் கொன்ற இலக்குவன் என் கணைபட்டு இறப்பதற்காகவே உயிரை வைத்துக் கொண்டு இருக்கிறுன். அவன் எங்கிருக்கிறுனே அங்கே சென்று போர் புரியஎண்ணுகிறேன். மேலும் நான் கூரிய அம்புகளை எய்யும்போது அவற்றை அடக்க, தடுக்க உங்களால் இயலுமோ? நான் தனியனுகவே நின்று உங்களோடு போரிட்டுத் தலைகளைத் துணித்துவிடுவேன். நீங்கள் உங்களுக்குத் துணையாக மண்ணவர்களையும் விண்ணவர்களையும்

125 யுத்த-I நாகபாசப்-2026

கொண்டு போர் புரிய வாருங்கள். ஒரு பகற்பொழுதிற்குள் உங்களை மாய்ப்பேன்" " என்று இந்திரசித்து வீரவுரை பகர்ந்து அனுமன் மீது தொள்ளாயிரம் அம்புகளை ஏவுகிறான். அனுமனின் உடலில் அவை பாய்கின்றன. அனுமன் பல்லைக் கடித்துக்கொண்டு, 'அடா! ஆயிரம் களிறுகளே ஆனாலும் ஒரு சிங்கத்தின் முன் நிற்கமுடியுமா? நான் எறியும் இதனைத் தாங்கவல்லையேல் தாங்கு' என்று ஒரு மலையை அவன் மேல் எறிகிறான். அம்மலை இந்திரசித்தின் மார்பில் பட்டுப் பொடியாகிறது. பழுக்கக் காய்ச்சிய இரும்பு சம்மட்டியால் தாக்கப் படும்பொழுது எவ்வாறு சிதறுமோ அவ்வாறு அம்மலை ஆகின்றதாம்! வஞ்சனை அரக்கன் ஆயிரக்கணக்கான அம்புகளை அனுமன் உடல் மீது எய்கிறான். பெருங் காற்றுத் தாக்கிக் குடைந்து வருத்த பொன்மயமான மேருமலை தோற்றத்தால் மட்டும் உயர்ந்து விளங்குவதுபோல, அனுமன் இந்திர சித்தின் பகழிகளால் தாக்குண்டு, குருதி ஆறென ஓட இனிச் செய்வது என்ன என்ற சிந்தனையில் மூழ்குகிறான். அப் பொழுது நீலன் இந்திரசித்துடன் போரிட வருகிறான். இதன் பின்னர் அரக்கர்கள் இலக்குவனின் அம்பு மழையால் நலிவடைந்து அழிகிறார்கள். வற்றிய கடலில் நின்ற மலையென அரக்கர்கள் மடிந்த போர்க் களத்தில் தான் ஒருவனாய் நிற்கும் இந்திரசித்து இலக்குவனை நெருங்குகிறான். அனுமன் விரைந்து அங்கு வந்து இலக்குவனைத் தன் தோளில் ஏறியருள வேண்ட அவன் ஏறி நின்று இந்திரசித்துடன் பெரும் போர் புரிகிறான்.

தசமுகன் சிறுவன் இலக்குவனோடு போர் இயற்றித் தளர்ந்து வில்லூன்றி நிற்கிறான். மாருதி ஆயிரம் குதிரைகள் பூட்டி நன்மணிகள் இழைக்கப்பட்ட மேகநாதனின் தேரினை உதைத்து மண்ணில் உருட்டுகிறான். இவ்வாறு இளையவனும் பலமுறை அரக்கனின் தேர்களை ஒன்றன்பின் ஒன்றாக ஒழிக்கத் தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்கிறார்கள்.

அனுமனும் தன் வாலால் அரக்கர்களைப் பிணித்து எமன் போல எங்கணும் எறிகிறான். சிலரை உதைத்து, அறைந்து, வெருட்டி அழிக்கிறான். அம்மட்டோ! ஆயிரம் யானைகளை

வீசிக் கடலைத் தூர்க்கிறான். தன் தோள்களைத் தட்டி ஆரவாரம் செய்து ஆயிரம் தேர்களைக் கைகளால் பிடித்து இழுக்கிறானும்! எமன், யானை, சிங்கம், குதிரை போன்ற இலக்குவனின் வாகனமாகிய அனுமனின் போர்த் தொழில் அவ்வாறு அமைந்து தேவர்களுக்கு மகிழ்ச்சியையும் அரக்கருக்கு அச்சத்தையும் கொடுக்கிறதாம்!

இலக்குவன் இந்திரசித்தின் கவசத்தை அழிக்கிறான். அவன் தளரவே, தூமிராக்கதன், மகாபாரிசுவான் என்னும் இரு அரக்கர்கள் இந்திரசித்து எழுவதற்குள் தம் ஆற்றலால் போரை முடித்துவிடுவதாக வருகிறார்கள். ஆனால் இலக்குவன் கணையினால் அவர்கள் தம்முடைய தேர், பாகர் இழந்து தவிக்கிறார்கள். இருவரும் அனுமனை நெருங்கி வயிரத் தண்டால் பொறி எழ அவனைப் புடைக்கிறார்கள். அனுமனே அவர்களுடைய படைக்கலன்களைப் பற்ற அரக்கர் இருவரும் உயிரைக் காப்பாற்றும் உணர்வில் செஞ்சோற்றுக் கடனையும் நினையாமல் ஓடுகிறார்கள்!

126 ''உண்டசெஞ் சோறு நோக்கா ருயிருக்கே யுதவி
செய்தார்''

என்பார் கம்பர். இந்திரசித்து எறிந்த நாகபாசத்தால் கட்டுண்ட அனுமன் மனநிலையினை ஆசிரியர் அழகுற விளக்குவார்.

127 ''ஆயிர கோடி மேலு மம்பு தன்னுகத் தூடு
போயின போது மொன்றுந் துடித்திலன்
பொடித்து மானத்
தீயெரி சிதறுஞ் செங்க ணஞ்சனை சிங்கம் மேனி
நாயகன் றம்பிக் குற்ற துயர்சுட நடுங்கு கின்றான்''

கருடனின் வருகையால் நாகபாசம் நீங்குகிறது. சடையப்ப வள்ளலின் திருவெண்ணெய்நல்லூரை அடைந்தோரின் பசி

---

126 யுத்த-I நாகபாசப்-2126
127 யுத்த-I நாகபாசப்-2150

நீங்குவது போலக் கருடன் வரவால் நாகபாசம் அகன்ற தாகக் கவிஞர் கூறுவர்.

நாகபாசத்தினின்று விடுபட்ட அனுமன் இராமனை அணுகி, 'தலைவ! நாம் இப்பொழுது நம் மகிழ்ச்சிப் பெருக்கினை ஏதோ ஒரு வகையால் வெளிப்படுத்தவில்லை என்றால் இளவல் இறந்துவிட்டானோ என்று தேவி அயர்வாள்; மேலும் நம் ஆரவாரம் கேட்டு இறந்த வானரர் எழுந் தனரோ என்ற அச்சம் அரக்கரை வாட்டும். எனவே ஆர வாரம் செய்ய வானரர்க்கு உரிமைதர வேண்டுகிறேன்' என்று கூறிப் பணிவன்போடு தாழ்ந்து நிற்கிறான். இராம பிரான் இசைவு தெரிவிக்கிறான். என்ன நடந்தது? இதோ பாடல்.

[128]''அழகிதென் றண்ணல் கூற வார்த்தனர் கடல்க ளஞ்சிக்
குழைவுற வனந்த னுச்சிக் குன்றுநின் றண்ட கோளம்
எழமிசை யுலக மேன்மே லேங்கிட விரிந்து சிந்தி
மழைவிழ மலைகள் கீற மாதிரம் பிளக்க மாதோ.''

# 28. [129]நெடியன் குறியன்

நெடியனாகவும் குறியனாகவும் உருவெடுக்க வல்ல அனுமன், வச்சிரதம்ஷ்ட்ரன் என்னும் அரக்கன் இடபன் என்னும் வானர வீரனைக் கொல்ல முற்பட்ட காலையில் அவனை எதிர்ப்படுகிறான். அவ்வரக்கன் ஒரு தண்டால் அனுமன் மார்பில் புடைக்கிறான். அனுமன் அத்தண்டினைப் பறித்து வீசிவிட்டு இராவணனை நிலைகுலையச் செய்த கையினால் அரக்கனைக் குத்திக் கொல்கிறான்.

பின்னர் நடைபெற்ற போரில் இராம இலக்குவர் அனுமன் அங்கதன் தோளில் நின்று அரக்கரை முறியடிக்கச்

128 யுத்த-I நாகபாசப்-2225
129 யுத்த-II படைத்தலைவர் வதைப்-2342

செல்கிறார்கள். இருவரும் இராம இலக்குவரைச் சுமந்த வண்ணம் விரைந்து அங்குமிங்கும் செல்வுதை இந்திரசித்து வியந்து நோக்குகிறான். அவர்கள் செல்லும் வேகத்தின் ஆற்றலால் அவர்களுக்குச் செல்வதற்கு இடமில்லை என்று சொல்லும்படி இருக்கிறது என்று புகழ்கிறான். 'இந்நால் எங்கும் தோன்றுகிற் காரணத்தால் மானிடர் என்பவர் இவ்விருவர்தாமோ' என்று இந்திரசித்து திகைப்பில் ஆழ்கிறான்.

இராம இலக்குவர் அரக்கரில் அறுபது வெள்ளத்தின ரைக் கண்டு அனுமன் தோள் கொட்டி ஆர்க்கிறான். அவ் வொலி கேட்டுத் தேரில் நின்ற அரக்கர் தேரிலிருந்து நிலை குலைந்து விழ்கிறார்கள். படைக்கலன்களைக் கீழே போட்டு விட்டு ஓட முயற்சி செய்கிறார்கள். ஊரில் உள்ள அரக்கரோ வயிருடன் குருதி க்க்குகின்றனர்.

சுக்கிரீவன், நீலன், அங்கதன், குமுதன், சாம்புன், பனசன் என்னும் வானரத் தலைவர்கள் அரக்கச் சேனைக் கடலின் பல பகுதிகளில் நின்று ஒருவரை ஒருவர் காணுமல் அரக்கரைக் கொன்று வருகிறார்கள். அப்பொழுது நரசிங்க மூர்த்தி போன்று நகத்தாலே அரக்கரை அழித்துவரும் அனுமன், அகம்பன் என்னும் அரக்க வீரனை எதிர்ப்படுகிறான். முருகனேடு முன்பு போரிட்ட தாருகன் என்னும் அவுணனே இராக்கத வேடங் கொண்டு அகம்பன் என்ற பெயரில் ஆயிரம் கழுதைகள் ஒட்டிய தேரில் வருகிறான். ''தேவேந்திரனே, திருமாலோ, சிவனே அனுமனை எதிர்க்கத் துணிவரோ?!'' என்று அகம்பன் அவன் வீரத்தைப் பாராட்டுகிறான். அனு மனைத் தான் தடுக்காமற் போனல் எழுதிரை வளாகம் என்னுகும்? ''விண்ணவர் இவனைத் தடுப்பரோ? அரக்கர் என்னும் பெயரையும் மாய்ப்பனே!'' என்று எண்ணியவாறு அகம்பன் அம்பு மழை பொழிந்து அனுமன் எதிரில் வருகிறான். அனுமன் வதைத்தலாகிய கல்வியினை மிகுதியாகக் கற்பான் போலச் செயல்படுகிறான். ஆம். அனுமன் அழித்த தேர்கள், குதிரைகள், யானைகள் பத்தாயிரம் பத்தாயிரம் பத்தாயிர

மாம்!! ஊழிக் காற்றிற்கும் சலியா மேருமலை அல்லவா அவன்!

அனுமனை வென்று இலங்கை வேந்தனைக் கொற்ற வேந்தனுக்கி, மனிதரைத் தோற்றவராக ஆக்கித் தேவர்க்கும் இடுக்கண் செய்வதாக அகம்பன் வஞ்சினம் உரைக்கிறுன். அவ்வாறு வரும் அரக்கனை வரவேற்ற அனுமன், தன்மேல் அகம்பன் எறிந்த அம்புகள் தைத்த வேளையிலும் ஒரு சிறிதும் சலியாது தேரைச் சாரதியுடன் மண்ணில் சாய்க்கிறுன். அகம்பனும் அனுமனை வில்லினுல் கொல்லமுடியாது என்று கருதி ஒரு தண்டினுல் அடித்து வீழ்த்த வருகிறுன்.

இருவரும் சளைக்காமல் ஒருவரை ஒருவர் தாக்குகிறுர்கள். வலத்தினும் இடத்தினும் சுழன்று சுழன்று மோதுகிறுர்கள். ஆர்த்தும் தோள் கொட்டியும் போரிடுகிறுர்கள். வஞ்சினம் உரைக்கிறுர்கள். இவ்வாறு இருவரும் தங்கள் போர்த் திறனை வெளிப்படுத்தும்பொழுது அனுமன் ஒரு தண்டினுல் அகம்பன் மார்பில் தாக்க அவனும் அதனை ஒரு தண்டினுல் தடுக்கிறுன். அனுமன் வீசிய தண்டின் விசையால் தண்டால் தடுத்த அகம்பனின் வலக்கை அற்று நிலத்தில் வீழ்கிறது. அகம்பன் தன் இடக்கையால் அனுமனின் மார்பில் குத்த அது வயிரக் குன்றத்து இடி வீழ்ந்ததுபோல் இருக்கிறதாம்! படைக்கலன் அற்ற அகம்பனைப் படைக் கருவியால் தாக்குவது போர் நெறியன்று என்று எண்ணிய அனுமன் தானும் வலக்கையால் குத்தாமல் இடக்கையால் குத்தவே அவனும் வாயால் குருதியைக் கக்குகிறுனும்! மீண்டும் இடக் கையால் குத்த, அகம்பனின் உயிர் பிரிகிறது. ஏனைய அரக்கர்கள் சிங்கத்தின் முன் நில்லாமல் ஓடும் விலங்குகள் போல ஓடி ஒளிகிறுர்கள்!

இலக்குவன் முதலானேர் எங்கே இருக்கிறுர்கள் என்று தெரிந்துகொள்ள முடியாமல் அனுமன் திகைக்கிறுன். இலக் குவனின் நாணெலி கேட்டு அனுமன் இலக்குவனை அடை

கிறுன். இலக்குவன் அனுமனைத் தழுவியவாறே வானரத் தலைவர்களைப் பற்றி வினவுகிறுன்.

[130] "போயினுர் போய வாறும் போயின தன்றிப் போரில்
ஆயினு ராயதொன்று மறிந்தில னைய யாரும்
மேயினர் மேய போதே தெரியலாம் விளைந்த தென்றுன்
தாயினுன் வேலை யோடு மயிந்திரப் பரவை தன்னை"

ஐந்திர வியாகரணக் கடலையும் தாண்டிய அனுமன் இவ்வாறு கூறுகிறுன். அரக்கரின் மந்திரத்தால் விளைந்த மாயத்தை இலக்குவனின் தெய்வக் கணையால் வீழ்த்தலாம் என்று பணிவுடன் கூறுகிறுன். அனுமனின் வேண்டுகோள்படி இலக்குவன் சிவனின் படைக்கலத்தை இராமனைத் தொழுது அரக்கர் மேல் ஏவுகிறுன். முக்கணுன் படையால் அரக்கர் எரிந்து வீழ, திசைக்கண் மூண்டிருந்த இருளும் விலக, வானரரும் மயக்கம் நீங்கி எழுகிறுர்கள். மாயத்தில் வல்ல மகோதரன் அங்கிருந்து மறைந்து ஏக வானரர் விரைந்து இலக்குவனை அடைந்து வெற்றிக் களிப்பால் ஆடுகின்றனர்.

# 29. [131] புகழோன்

இந்திரசித்து இலக்குவன் மீது நான்முகன் படையினை ஏவ, அதனுல் பெரிய மலையில் குருவிக்கூட்டம் மொய்ப்பது போலக் கணைகள் அவன் மேனியில் பாய்கின்றன. கோடிக் கணக்கான கணைகளால் தாக்குண்ட இலக்குவன் செய்வது அறியாமல் உணர்வு தேய்ந்து களிறு பள்ளியில் அடங்கினுற் போல அயர்கிறுன். மகோதரன் மாயப் போரில் ஈடுபட்டு இந்திரன்போல உருக்கொண்டு ஐராவதத்தில் ஏறி முனிவர், வானவர் புடை சூழ இராம இலக்குவரை எதிர்க்க வந்துள்ளது வானரரிடையே பெருங் குழப்பத்தை ஏற்படுத்

130 யுத்த-II படைத்தலைவர் வதைப்-2547
131 யுத்த-II பிரமாத்திரப்-2586

தியதாம். இவ்வுண்மையினை அறியாத அனுமனும் இந்திரனையும் அவன் யானையினையும் அழிப்பேன் என்று எழும்போது அவனையும் நான்முகன் படை தாக்கியதால் நினைவிழந்து நிலத்தில் சாய்கிருன். எல்லாரும் உயிர்குன்றிச் செருக்களத்தில் வீழ்ந்து கிடக்கிருர்கள்.

இராமன் படைக்கலத்திற்குப் பூசனை இயற்றிப் போர்க்களம் வருகிருன். கீழே வீழ்ந்து கிடக்கும் அனுமனைக் கண்டு இராமன் துயரம் தாங்காமல் புலம்புகிருன். ''அனும! அன்று கடலைக் கடந்து வந்து சீதையின் நிலையினைக் கூறி என் துன்பத்தைக் களைந்து உதவியது இவ்வாறு போர்க்களத்தில் இறப்பதற்குத் தானே? அரக்கர் எய்த கணைகள் உன் உடலைத் துளைத்தனவோ? உனக்குத் தேவர் கொடுத்த வரங்களும், முனிவர்களின் வாழ்த்துரைகளும் சீதை செய்த உதவியும் என் தீவினைப் பயனல் பயனற்றுப் போயினவோ'' என்று பலவாருக இராமபிரான் உற்றவரைப் பிரிந்த துயரால் புலம்புகிருன். இராமன் மயங்குகிருன். தேவரும் இராமனின் துயர் துடைக்க வருகிருர்கள்.

இராவணன் பெருமகிழ்ச்சி அடைந்து சீதையை விமானத்தில் ஏற்றி இராம இலக்குவரைக் காண்பிக்குமாறு அரக்கருக்கு ஆணையிடுகிருன். செருக்களத்தில் மயங்கிக் கிடக்கும் இருவரையும், வானரையும் கண்டு சீதை பெரும் துன்பம் அடைகிருள். அப்பொழுது திரிசடை என்பவள் சீதையிடம், பிரமன் படையால் இவர்கள் தளர்ச்சி அடைந்துள்ளனர்; விரைவில் துன்பம் நீங்கப் பெறுவர், என்று கூறி அவளைத் தேற்றுகிருள். மேலும் சீதை நல்கிய வரத்தினுல் அனுமனுக்கு அழிவு நேராது என்பதையும் உணர்த்துகிருள். சீதை ஒருவாறு மனம் தேறுகிருள். அரக்கியர் அவளை மீளவும் கொண்டேகுகிருர்கள்.

வீடணன் இராமனின் ஆணைப்படி உணவுப் பொருள்களைப் பெற்றுப் பாடி வீட்டில் வைத்துப் போர்க்களம்

போந்து வானரர் பிரமன் சாபத்தால் தாக்குண்டவர்போல நலிவுற்றுக் கிடக்கும் அவல நிலையினைக் காண்கிறான். நஞ்சருந்தியவன் போல உணர்வு ஒழிய மயங்குகிறான். உடனே மயக்கம் நீங்கி, இளங்கிளையோடு சாய்ந்த இராமனைக் காணுகிறான்.

132 ''ஆயினு மிவர்க் கில்லை யழிவெனு மதனு லாவி
போயின தில்லை வாயாற் புலம்பிலன் பொருமிப்
பொங்கித்
தீயினு மெரியு நெஞ்சின் றெரியலன் றெரிய நோக்கி
நாயகன் மேனிக் கில்லை வடுவென நடுக்கந் தீர்ந்தான்''

எனக் கம்பர் அவன் நிலையினைக் கூறுவார். இந்திரசித்து எய்த அந்தணன் படையினுல் விளைந்த விளைவு என்பதையும் இளவலுக்காக இராமபிரான் மனம் நொந்திருக்கிறான் என்பதையும் தன் கூர்ந்த மதியினுல் அறிந்து பிரமன் படையினை நீக்கும் வழியினை ஆராய்கிறான். நாகபாசத்திற்கு ஏற்பட்ட அழிவினைப் போலப் பிரமன் படையும் இற்று அழியும் என்று எண்ணிச் செருக்களத்தில் யாரேனும் உயிருடன் இருக்கிறார்களா என்று ஒரு கொள்ளிக்கட்டை ஏந்திப் பார்வையிடுகிறான்.

133 ''வாய்மடித் திரண்டு கையு முறுக்கித்தன் வயிரச் செங்கண்
தீயுகக் கனகக் குற்றிற் றிரண்டதோண் மழையைத்
தீண்ட
ஆயிர கோடியானைப் பெரும்பிணத் தமளி மேலான்
காய்சினத் தனுமனென்னுங் கடல் கடந்தானைக்
கண்டான்''

விடணன் அனுமனைக் கண்டு உடலில் பாய்ந்துள்ள அம்புகளைக் களைந்து, மழைநீர் கொண்டு முகத்தினைக் குளிரச் செய்து களைப்பைப் போக்குகிறான்.

---

132 யுத்த-IIமருத்துமலைப்-2660
133 யுத்த-II மருத்துமலைப்-2665

அனுமன் மெல்ல உணர்வு பெறுகிறான். கண் விழித்து மெய் சிலிர்த்து விக்கல் தோன்ற இராம நாமத்தைப் பன்முறை கூறத் தேவர்கள் ஆர்க்கிறார்கள். அழுகையோடு உவகையுற்ற வீடணன், ஆர்வத்துடன் அனுமனைத் தழுவ, அவனும் இராமனின் நலத்தை உசாவி அறிகிறான். சாம்பனைப் பற்றி வினவ, வீடணன் 'அறிந்திலன் அவனை' என்ன, அவனுக்கு அழிவு என்பது இல்லை என்பதை உணர்ந்த அனுமன் வீடணனுடன் சேர்ந்து அவனைத் தேடுகிறான். அவனைக் காணில் அவனால் துயர் நீங்கும் வழியினைக் கேட்டு அறியலாம் என்று அனுமன் வீடணனிடம் தெரிவிக்கிறான்.

சாம்பனோ, முதுமையாலும், கணைபட்ட நோவினாலும், நண்பர்க்கு உற்ற இடுக்கணை நினைக்கின்ற துன்பத்தாலும், மூச்சடங்கி மயக்கத்தில் ஆழ்ந்திருந்தபோதிலும் தன்னை நோக்கி இருவீரர் வருவதைச் செவிப் புலத்தால் உணர் கிறான்.

134 ''அரக்கனோ வென்னை யாளு மண்ணலோ.
வனுமன் றானோ
இரக்கமுற் றருள வந்த தேவரோ முனிவ ரேயோ
வரக்கட வார்க ளெல்லின் மாற்றலர் மலைந்துபோனார்
புரக்கவுள் ளாரே யென்ன நினைந்தனன்
பொரும றீர்ந்தான்

இவ்வாறு வருபவர் நன்மை செய்பவரே என்று உணர்ந்து, அவர்களைத் தேற்றும் வண்ணம் அன்பொழுக், 135 'யாவிர் அணுகினிர்' என்ற வீடணன் குரலால் மகிழ்ச்சி அடைந்த சாம்பன் அருகில் உள்ளவனையும் யாரெனக் கேட்கிறான்.

''கொற்றவனே வாழி! அனுமன் நிற்கிறேன். தொழு கிறேன்'' என்ற சொற்களைச் செவிமடுத்த சாம்பன் 'நாம் எல்லோரும் இறக்கவில்லை - எழுந்தனம், எழுந்தோம்' என்று உவகைப் பெருக்கால் முழக்கம் செய்கிறான்.

---

134 யுத்த-II மருத்துமலைப்-2673

விரிஞ்சன் படை இராமனை ஏதும் செய்யாது என்பதை அறியவல்ல சாம்பன் அவன் செய்த செயல் குறித்துக்கேட்க, அனுமனும் 'துன்ப வெள்ளத் துயிலுளான்' என்று பதில் அளிக்கிறுன்.

'இலக்குவன் உயிர் ஒடுங்கிக் கிடப்பதை அறிந்தால் இராமன் தாங்கவல்லனே? இருவரும் ஒருவரே என்பதனை ஆய்ந்து பார்த்தால் தெரியலாம். வயிரத் தோளாய்! அனும! நீ காலம் தாழ்த்தாமல் எல்லாரையும் உய்விக்க வல்ல மருந்து போய்க் கொணர்தி' என்று வேண்டுகிறுன்.

''மாருதி இங்கிருந்து ஒன்பதாயிரம் யோசனை தூரம் கடந்து சென்றுல் இமயமலையைக் காண்பாய். அங்கிருந்து ஏமகூட மலை ஒன்பதாயிரம் யோசனை தொலைவில் உள்ளது. அதே அளவு தொலைவில் சென்றுல் நிடத மலையைக் காண லாம். அங்கிருந்து ஒன்பதாயிரம் யோசனை தொலைவில் உள்ள மேருமலையினை அடைந்தால் அது முப்பத்திராயிரம் யோசனை பரப்பளவு உள்ளதைக் காணலாம். அதனையும் கடந்து பதினேராயிரம் யோசனை தொலைவில் உள்ள நீலகிரி யினைக் கடந்து மேலும் நாலாயிர யோசனை தொலைவில் உள்ள கரிய மருந்து மலையினைச் சென்றடையலாம். அதனைக் காணின் நம் துயர் நீங்குவதை நீயே நேரில் காணலாம். அங்கே மாண்டவரை மீளச் செய்யும் மருந்தும், வெட்டுப் பட்ட அவயவங்களை இணைக்கும் மருந்தும், படைக்கலன்களை வெளிப்படுத்தும் மருந்தும், உருவம் மாறினுல் பழைய உருவத்தை மீண்டும் பெறச் செய்யும் மருந்தும் இருப்பதைக் காணலாம். அனும ! அவற்றை விரைந்து கொணர்வாய்.

'இம் மருந்துகள் பாற்கடலை கடையப்பட்ட காலையில் எழுந்தன. தேவர்கள் பாதுகாவலான இடத்தில் அவற்றை வைத்தனர். திருமால் உலகத்தை ஈரடியால் அளந்தபோது யான் வெற்றி முரசைக் கொட்டினேன். அப்பொழுது ஒரு முனிவர் மூலம் மருந்துகளின் பெருமையினை உணர்ந்தேன். எண்ணிறந்த தெய்வங்களும், நேமிப் படையும் காக்கும்

மருந்துகளை நீ தேடிச் சென்றால் உன் செயலின் நன்பொருளை நோக்கி அவை தாமே உன் கையகத்து வந்துசேரும். ஆண்டு உறையும் தெய்வங்களும், நேமிப்படையும் உனக்குத் தீங்கிழைக்காமல் நீங்கும், என்று சாம்பன் விரிவாகக் கூறுகிறான். அனுமன், 'இனிச் செய்ய வேண்டிய செயல் இது தான் என்றால் இறந்தவர் பிழைத்தவரே யாவர். இராம பிரானின் துயரத்தை நீக்கச் செல்வீர்' என்று சாம்பனுக்கும், வீடணனுக்கும் கூறிவிட்டுப் பேருருவத்துடன் எழுகிறான். அனுமன் செல்லும் நிலையினை விளக்கும் பாடலில்,

136''வால் வளைத்துக் கைநிமிர்த்து வாயினையும் சிறிதகல மடித்து மானக்
கானிலத்தி னிடையூன்றி யுரம் விரித்துக் கழுத்தினையுஞ் சுருக்கிக் காட்டித்
தோன்மயிர்க்குந் தளஞ்சிலிர்ப்ப விசைந் தெழுந்தா னவ்விலங்கை துளங்கிச் சூழ்ந்த
வேலையிற்புக் கழுந்தியதோர் மரக்கலம்போற் றிரிந்தயர விசயத் தோளான்''

என்று கம்பர் வர்ணிக்கிறார்.

உடல் முன்னேயும் உள்ளம் பின்னேயும் செல்ல அனுமன் காற்றைப்போல் விரைந்து மருந்துமலை நோக்கிச் செல்கிறான். அவனுடைய செலவின் வேகத்தை நோக்குங்கால் கலுழனே, பிரமனே, சிவனே திருமாலே என்று வானவர் எண்ணுகிறார்களாம்! தேவர் வாழ்த்துரையுடன் அனுமன் கயிலை மலையினை அடைகிறான். அனுமனின் வரவு குறித்து உமையவளுக்குக் கூறிய சிவபெருமான் அரக்கரின் இலங்கைக்குத் தீமை நேரும் கொடிய போரை விரைவில் காணலாம் என்று சொல்லுகிறான். மால், அயன், அரி, இந்திரன் போன்றோரை வணங்கியபின் அனுமன் திசைப் பாலகரையும் காண்கிறான். உத்தரகுருவில் சூரியன் கதிர்பட்டு இருள் நீங்கியதைக் கண்டு விடிந்துவிட்டதோ என்று திகைப்படைந்து, பொழுது புலர்

---

135 யுத்த-II மருத்துமலைப்-2674

வதற்குள் மருந்துகளை எடுத்துச் செல்லவேண்டும் என்ற எண்ணம் வீணாகிவிட்டதோ என்று வருந்துகிறான். பின்னர் விடியவில்லை என்பதை அறிந்து மேலும் தொடர்ந்து சென்று மருந்து மலையினை அடைகிறான். அங்குள்ள தெய்வங்களுக்குத் தான் வந்த காரணத்தைக் கூறி, வேண்டிய மருந்துகளை ஆராயப் புகின் காலம் தாழ்க்கும் என்ற நினைவில் மருந்து மலையினைப் பெயர்த்து அங்கையில் தாங்கிப் பறந்து மீள்கிறான்.

அதற்கிடையில் இராமபிரான் தன்னைச் சார்ந்தோர் அடைந்த அவலம் குறித்துப் பெரிதும் வருந்துகிறான். விடணன் சாம்பன் ஆகியோரிடம் நலம் குறித்து வினவுகிறான். விடணன் அனுமன் கொணரும் மருந்து மலையால் பிணி நீங்கும் என ஆறுதல் உரை கூற, இராமனும் மருந்து மலை கொண்டு வரும் ஆற்றல் உடையவன் அனுமன் என்று பாராட்டுகிறான். அனுமன் மருந்து மலையை ஏந்தி அவண் வர, அம்மலையில் வீசிய காற்றால் அனைவரும் உயிர்பெற்று எழுகிறார்கள்!

அரக்கர் உடல்கள் கடலில் எறியப்பட்ட காரணத்தால் உயிர் பெறவில்லையாம்! எதிரே தோன்றும் மரக்கலங்களும் உய்வடைகின்றனவாம்! வானரர் உய்ந்தனர் என்று சொல்லவும் வேண்டுமோ என்று வினவுகிறார் கம்பர்.

இலக்குவன் எழுந்ததும் இராமன் அளவிலா மகிழ்ச்சி அடைந்து தழுவுகிறான். அதனைக் கண்ணுற்ற வேதங்கள், வேதியர் ஞானம், மெய்ப்புகழ், கடல்கள், தேவர்கள் மனம், எல்லாம் மகிழ்ச்சியால் ஆரவாரிக்கின்றன. அந்தணன் படையும் சுந்தரவில்லியைத் தொழுது சூழ வந்து அகல்கிறது.

அனுமன் செய்த உதவியினை எண்ணிய இராமன் மகிழ்கிறான். அவன் அன்பினால் நீர்வாரும் கண்களால் அனுமனை நோக்குகிறான். தேவர்கள் மகிழ அவனைத் தழுவுகிறான்.

பிரமன் படையால் உயிரிழந்த நிலை அனுமனால் நீங்கியதாகப் பாராட்டுகிறான்.

[137]''மன்னிற் றோன்றினே முன்ன மாண்டுளோம்
நின்னிற் றோன்றினே நெறியிற் றோன்றினாய்''

என்கிறான். ''அனும! உயிரைக் காத்த உதவிக்கு உயிரைக் கொடுத்தாலும் ஈடாகுமா? எமக்குப் பழியும் வாரா வண்ணம், பகைவரும் அழியும்படியான நிலையினைத் தோற்று வித்தாய். வேத நெறியினையும் காத்தாய்.

[138]''ஒன்று மின்னனே யுறுகி லாதுநீ
என்றும் வாழ்தியா லினிதெ னேவலால்''

என்று இராமன் அனுமனை வாழ்த்துகிறான்.

அனைவரும் அனுமனை வாழ்த்துகிறார்கள். சாம்பன் வேண்டவே அனுமன் மருந்து மலையைத் தூக்கி உரிய இடத்தில் வைக்கச் செல்கிறான்.

## 30. [139]உதிக்கின்ற கதிரோன் ஒத்தான்

அனுமன் சஞ்சீவ மலையினைக் கொணர்ந்ததால் நான் முகன் படை செயல் இழந்துவிட்டது என்று மாலியவான் இராவணனிடம் கூறி, இராமனின் மனைவியை அவனிடம் சேர்ப்பித்துத் தாழ்வதே கருமம் என்று நல்வழி காட்டு கிறான். அஞ்சினவர்கள் எல்லாம் அகலலாம் என்று சினந்து இராமனை அடுத்தநாளே வெல்வதாக இராவணன் மொழி கிறான். பகைவர் ஆற்றலை அறுதியிட்டுக் கூற இயலாது என்றும், நிகும்பலை யாகத்தைத் தான் செய்து முடித்தால் அவரை வெல்லலாம் என்றும், வீடணன் குறுக்கிட்டு யாகத்தைக் கெடுக்காமல் பார்க்க மாயா சீதையினை

137 யுத்த-II மருத்துமலைப்-2766
138 யுத்த-II மருத்துமலைப்-2769
139 யுத்த-II நிகும்பலையாகப்-2986

அனுமன் முன் நிறுத்தி அவளைக் கைவாளால் வீழ்த்தி அயோத்திக்குப் போவதாகப் போக்குக் காட்டினுல், பகைவர் துயரத்தில் மூழ்குவர் என்றும் அதன் பிறகு வெற்றியினை எளிதில் பெறலாம் என்றும் தந்தையிடம் இந்திரசித்து தன் கருத்தினை வெளியிடுகிருன். இராவணனும் மனம் மகிழ்ந்து மகன் கருத்தினை ஆதரிக்கிருன்.

பிரமன் படை மருந்து மலையால் நீங்கியவுடன் வானரர்கள் இலங்கையை எரியூட்ட இராமபிரானின் இசைவை வேண்டி வெற்றியும் பெறுகிருர்கள். கொள்ளிக்கட்டைகளை இலங்கையில் வீசி ஆரவாரம் செய்கிருர்கள். மருந்து மலையை வைத்துவிட்டு இலங்கைக்குத் திரும்பும் மாருதி பேராரவாரம் செய்கிருன். மாயா சீதையின் மலர்க்குழலைப் பற்றி வாளுடன் இந்திரசித்து அனுமன் இருக்கும் மேற்கு வாயிலை அடைகிருன். அவன் அனுமனை நோக்கி,

140''வந்திவள் காரண மாக மலைந்தீர்
எந்தை யிகழ்ந்தன னியானிவ ளாவி
சிந்துவ னென்று செறுத்துரை செய்தான்''

அதனைக் கேட்ட,

''அந்தமின் மாருதி யஞ்சி'' அயர்கிருன்.

அவளை, அசோக வனத்தில் கண்ட சீதையாம் என்று கருதி பதைபதைத்து வாழ்வெல்லாம் ஒழிந்தது போலும் என்று வருந்தும் அனுமன் என்ன செய்வது என்று அறியாமல் பெரிதும் துன்புறுகிருன். சீதையை எவ்வாருயினும் மீட்க வேண்டும் என்றும், நீதியினை உரைத்தாவது இந்திரசித்தின் எண்ணத்தை மாற்ற வேண்டும் என்றும், நினைத்து அவனிடம் வேண்டுகிருன்.

''குணத்தோனே! பெண்ணைக் கொல்வது பெரும் பாவம் அல்லவா? பிரமன் வழியில் வந்தவனே! வேதநூல்

---

140 யுத்த-II மாயாசீதைப்-2824

தெரிந்தவனே! உலகோர் வெறுக்கும் பெரும் பழியினைச் செய்யலாமோ? உன் செயலைக் கண்டு மண்ணும் விண்ணும் கொதிப்பதைக் காணாய். என்மேல் இரக்கம் கொண்டாவது இச்செயலைத் தவிராய். உலகமெல்லாம் உன் வயம் ஆகும். புன்மை தொடங்கல் புகழுக்கு அழிவாகும்'' என்று இரங்கி அனுமன் இந்திரசித்திடம் சீதையை விரட்டிட மன்றாடுகிறான்.

''மாருதி! எந்தையும் இலங்கையும் உய்ய இதனினும் சிறந்த செயல் வேறுண்டோ? இவளைக் கொல்வதோடு அல்லாமல் அயோத்தியையும் அழிப்பேன். வானரர்களாகிய உங்கள் தொழில் ஈண்டு ஒன்றுமில்லை. உங்களால் முடிந்தால் அயோத்தியைக் காத்துக் கொள்ளுங்கள். இப்பொழுதே புட்பக விமானத்தில் சென்று இராமனின் தம்பியர், தாயர் போன்றோரை அழிப்பேன்'' என்று வீரமாகப் பேசி மாயா சீதையைத் தன் வாளினால் வெட்டி வடக்கு நோக்கிச் செல்கிறான்,

141''ஒன்று முணர்ந்திலன் மாருதி யுக்கான்
வென்றி நெடுங்கிரி போல விழுந்தான்''

இது கவிக் கூற்றாகும்.

இந்திரசித்து அயோத்திக்குப் போவதுபோலச் சென்று நிகும்பலையை வந்தடைகிறான். தூயவன் அனுமன் துன்பம் தாங்காமல் துடிக்கிறான். பெண் குலத்தின் பெருமைக்குரிய சீதை வெட்டுண்டதால் தெய்வம் இல்லையோ என்றும், தன் ஆவியும் நெஞ்சும் பின்னமாகவில்லையே என்றும் வருந்து கிறான். இந்திரசித்து சென்ற திசையில் பாய எண்ணுகிறான்.

'அரக்கர் வாழ்ந்தனர்! அமரர் தாழ்ந்தனர்! சிறகுகள் ஒடிந்த பறவை ஆனேனே! நான் சிறையிருந்த தேவியைக் காத்தவாறு என்னே! அவளை வெட்டவும் பார்த்து நிற்கிறேனே! என்னே கருணை!

---

141 யுத்த-II மாயாசீதைப்-2836

142 ''வெல்விக்க வந்து நின்னை மீட்பிக்க வன்று வெய்திற்
கொல்விக்க வந்தே னென்றே கொடும்பழி
கூட்டிக்கொண்டேன்''

''அசோக வனத்தில் சீதை இருந்தாள் என்று கூறிய நான் அறத்தின் நாயகன் முன் சீதை இறந்தாள் என்று சொல்ல இருக்கிறேன் போலும்! கடல் கடந்தேன்—இலங்கையை எரியூட்டினேன். இராமன் 'உன்னை ஒப்பார் இல்லை' என்று கூறிய புகழ்மொழியையும் கேட்டேன். எனினும் என் அடிமைத் தொழில் கடலில் கரைத்த கோட்டம்போல் ஆனதே!'' என்று அனுமன் பலவாறு கூறித் தன் ஆற்ருமையை வெளிப்படுத்துகிருன். அயோத்தி நோக்கிச் சென்ற இந்திரசித்துவைத் தொடர்ந்தால் இராமபிரானுக்குச் செய்தி சொல்லுவார் யார் என்று மனம் குழம்பி உற்றதை உரியவற்குச் சொல்ல இராமன் இருக்குமிடம் நோக்கி விரைகிருன். இராமனைக் கண்டதும்,

143 ''வெங்கணீ ரருவி சோர மால்வரை யென்ன''

விழ்கிருன். அனுமன் மூலம் அனைத்தும் அறிந்த இராமனின் உளநிலை சொல்லும் தரத்ததோ?

விடணனின் அரக்கர் மாயை உணரும் ஆற்றலால் நடந்தவற்றை அறிந்த இராம இலக்குவரும் வானரரும் துன்பம் நீங்கி மகிழ்கிருர்கள்.

இலக்குவன் இந்திரசித்து இயற்றிய நிகும்பலை யாகத்தை அழிக்கிருன். இந்திரசித்தை நோக்கி அனுமன் ஏளனமாகக் கூறுகிருன்.

'நானுனை யிரந்துகூறு நயமொழி யொன்றும் கேளாய்' என்று சொல்ல ஆரம்பிக்கிருன். 'சானகியை வெட்டியது என்னுயிற்று? வடதிசை சென்ருயே! வெற்றியா? ஆனல்

---

142 யுத்த-II மாயாசீதைப்-2843
143 யுத்த-II மாயாசீதைப்-2848

போர்க்குரிய நாணொலியைக் கேட்டிலேமே! எப்பொழுது அயோத்தியிலிருந்து திரும்பினீர்கள்? பரதனைக் கண்டாயா? வெற்றி கொண்டாயா? பரதனைக் கண்டு உன் வில் ஆற்றலைக் காட்டி மீண்டனையோ? ஏனையோரையும் அங்குக் கண்டனையோ? உன் மாயப்போர் இன்றே முடியும்! இனி நீ எங்கள் மீது வீச இருப்பவை பிரமன் படையா? சிவனின் கணையா? மாலவனின் நேமியா? யாதோ?''

144''கூசினேம் போதும் போதும் கூற்றினர் குறுக
வந்தார்!''

''நீங்கள் பெற்ற வரங்கள், மாயங்கள், படைக்கலன்கள் என்ற எல்லாம் அழியக் காண்பாய். மூவரே வந்து உங்களைத் தாங்கினாலும் பிழைக்க மாட்டீர்! உங்களுக்கு இடப் பக்கம் துடிக்கிறதே? உன்னைக் கொல்லவே இலக்குவன் வந்துள்ளான்.'' இவ்வாறு அனுமன் கூறியதும் இந்திரசித்து வெகுண்டு உரைக்கிறான்.

'அனும? என்ன நினைத்து இவ்வாறு எங்களை இகழ்ந்தனை? போர்தோறும் இறந்ததனை நினைவு கொண்மின். அனைவரும் இறந்தால் மீட்பிக்க மருந்தினை வைத்திருக்கிறீர்களோ? இறத்தலை விரும்பியா அழைத்தீர்?

145''இலக்குவ னுக மற்றை இராமனேயாக வீண்டு
விலக்குவ ரெல்லாம் வந்து விலக்குக குரங்கு வெள்ளங்
குலக்குல மாக மாளும் கொற்றமு மனிதர் கொள்ளும்
அலக்கணு முனிவர் தாமு மமரருங் காண்ப ரன்றே''

146''யானுடை வில்லு மென்பொற் றேள்களு மிருக்க
வின்னம்
ஊனுடை யுயிர்க ளியாவு முய்யுமோ வொளிப்பிலாமற்
கூனுடைக் குரங்கி னேடு மனிதரைக் கொன்று சென்றவ்
வானினுந் தொடர்ந்து கொல்வன் மருந்தினுமுய்ய
மாட்டீர்''

---

144 யுத்த-II நிகும்பலையாகப்-2965
145 யுத்த-II நிகும்பலையாகப்-2972
146 யுத்த-II நிகும்பலையாகப்-2973

''வேள்வியைச் சிதைத்தோம் வென்றேம் என்று செருக்குக் கொள்ள வேண்டாம். உங்களைப்போல் வாயினுல் சொல்ல மாட்டேன். இருமுறை என்னிடம் தோற்றீர். இனியும் வெல்லுவீரோ'' என்று அனுமனை நோக்கி இந்திரசித்து இகழ்ந்து பேசுகிறுன்.

இந்திரசித்தும் அனுமனும் போர்புரியத் தொடங்குகிறுர்கள். அனுமன் ஒரு மலையைத் தூக்கி நிற்கிறுன். அது கண்டு இந்திரசித்து,

147''நில்லடா நில்லு நில்லு நீயடா வாசி பேசிச்
சல்லெடா நின்ற தென்னே போர்க்களத் தமரர்காணக்
கொல்லலா மென்றே நன்று குரங்கென்றுற் கூடு மன்றே
நல்லைபோர் வாவா வென்று னமனுக்கு நமனுய்
நின்றுன்''

அனுமன் வீசிய மலையை இந்திரசித்து தூளாக்குகிறுன். அனுமனின் மார்பில், தோளில், காலில், கையில், கழுத்தில் நுதலில், கண்ணில் தைக்குமாறு பலகணைகளைத் தொடுத்து எய்கிறுன். 148''உதிரத்தின் செம்மை யாலு முதிக்கின்ற கதிரோ னெுத்தான்'' என்கிறுர் கவிஞர். அனுமன் அதனுல் சிறிது அயர்கிறுன். பின்னர் தெளிந்து நோக்குகிறுன். இலக்குவன் இந்திரசித்துடன் போர்புரிகிறுன். அனுமன் வேண்ட இலக்குவன் அவன் தோளில் ஏறி அமர் புரிகிறுன்.

## 31. [149]வீரர்க்கும் வீரன்

இராமபிரான் தான் ஒருவனே அரக்கரை வெல்வதற்குப் புறப்படுவதாகவும், தன்னைக்குறித்து யாரும் கவல

---

147 யுத்த-II நிகும்பலையாகப்-2981
148 யுத்த-II நிகும்பலையாகப்-2986
149 யுத்த-II மூலபலவதைப்-3323

வேண்டாம் என்றும், அரக்கருக்குப் பயந்து ஓடிய வானரர் களைத் தேற்றித் திரட்டிப் பாதுகாக்க வேண்டும் என்றும் தம்பி இலக்குவனிடம் கூறுகிறான். மாருதியையும், சூரியன் சேனையையும் துணையாகக் கொண்டு இருக்க ஆணையிட்டுப் புறப்படுகிறான். அப்பொழுது நடைபெறும் போரில் தன் மீது அமர்ந்து போரிடவேண்டும் என்று அனுமன் தாழ்ந்து நிற்கிறான்.

'ஐய! உன்னால் முடியாதது ஒன்று உண்டோ? இராவணன் இலக்குவனை எதிர்க்க முற்பட்டால் உன் துணை சிவனுக்கு வேண்டுமே. நீ இவண் இல்லாது என்னுடன் வருவாய் என்றால் வானரப்படையும் கெடும். வெற்றிக்கும் ஊறு நேருமே. உன் துணையை நம்பியல்லவா இலக்குவனை இந்திரசித்தை அழிக்க அனுப்பினேன்! ஆதலால் உன்னைப் பிரியாமல் வெற்றி என் தம்பி பெற அவன் பின் செல்வாய்'' என்று இராமன் ஆணையிட அனைவரையும் காக்கும் தொழில் தன்னகத்தே உள்ளது என்ற இராமனின் கருத்தினை ஏற்று அனுமனும் இளவல் பின் எழுந்து செல்கிறான்.

இலக்குவனோடு சேர்ந்து அனுமன் அரக்கர் படையினைச் சாடுகிறான். அனுமன் வலிய சிங்கம்போல கூரிய நகத்துடன் இடியேறு போலப் போர் புரிகிறான். இராவணன் படை நிலைகெட்டு ஓடுகிறது. இராவணன் நெஞ்சு கொதிக்கிறது. இலக்குவன் அனுமன் தோளில் ஏறி இராவணனை எதிர்க் கிறான். இலங்கைக்கோன் முதற்கடவுள் இயற்றிய மோகனப் படையினை இலக்குவன் மீது ஏவ, வீடணனின் அறிவுரையால் இலக்குவன் மாலவன் படையினால் அவனை வீழ்த்துகிறான். அதனால் வெகுண்ட இராவணன் தன் தம்பி வீடணன்மேல் மயனின் வேலை எறிகிறான். தன்னுயிரைப் பறிக்கும் என்று அஞ்சிய வீடணனைத் தேற்றி, இலக்குவன் குறிக்கிட்ட எல்லாரையும் தடுத்துத் தானே அவ்வேலை மார்பில் ஏற்கிறான்! இராவணன் களிப்பினால் அனுமன் மீதும் கணைகளை எய்து இலங்கை நகருக்குத் திரும்பிச் செல்கிறான்.

இலக்குவனின் துயர நிலை கண்டு அனைவரும் துன்பத்தில் ஆழ்கிறார்கள். சாம்பன் அனைவரையும் தேற்றி, [150] ''அனுமனிற்கநா மாருயிர்க் கிரங்குவதறிவோ'' என்கிறான். ''நாம் நினையுமுன் அனுமன் நிமிர்ந்து மருந்தினைக் கொணர்வானே! நம் துயர் தீர்ப்பானே! தினையளவும் அல்லல் உற்று அழுங்சன்மின்'' என்று கூறி அனுமனின் உடலில் தைத்த அம்புகளை நீக்கி, இளையவனை இந்நிலையில் காண இராமபிரான் பொறுப்பானோ' என்று அறிவுறுத்தியவுடன், அனுமன் கடிதேகி மருந்தினைக் கொணர்ந்து அனைவருடைய துன்பத்தையும் நீக்குகிறான். இலக்குவன் எழுகிறான். சாம்பன் மூலம் அனுமன் திறத்தை அறிந்த இராமன் அனுமனைப் புல்லி [151] ''பெற்றெனை னுன்னை யென்னை பெருதன பெரியோ யொன்றும் மற்றிடை யூறு செல்லா வாயுளை யாகல்'' என்று கூறி வாழ்த்துகிறான்.

# 32. [152] நீதி வித்தகன்

இராவண வதம் இராமனால் இனிதே நிறைவேறுகிறது. இளையவன் முடிசூட்ட வீடணன் இலங்கை வேந்தனாகிறான். வீடணனுக்கு இராமன் அறிவுரைகள் கூறியபின் அனுமனை நோக்குகிறான். அழகிய மயிலன்னாள் சீதையிடம் நடந்தவற்றைக் கூறி வருமாறு அனுமனை அனுப்புகிறான்.

இராமனை வணங்கி அனுமன் அசோகவனத்தில் சீதை முன் விரைந்து சென்று களிப்புடன் நிற்கிறான். நிற்கிறானா? இல்லை இல்லை! ஆடுகிறானா? இல்லை இல்லை - பாடுகிறான். இராம நாமத்தை ஆயிரம் தடவை கூறுகிறான். இருகைகள் கூப்பியவண்ணம் தொழுகிறான்.

---

150 யுத்த-II வேலேற்ற-3531
151 யுத்த-II வேலேற்ற-3538
152 யுத்த-II மீட்சிப்-3945

153''ஏழை சோபன மேந்திழை சோபனம்
வாழி சோபன மங்கள சோபனம்
ஆழி யான வரக்கனே யாரியச்
சூழியானே துகைத்தது சோபனம்''

இவ்வாறு மங்களம் கூறிய அனுமன் இலங்கையில் அரக்கியர் தவிர அரக்கர் அழிந்ததையும் குறிப்பிடுகிறுன். அமிழ்தம் போல இனித்த சொற்களேக் கேட்டுப் பிராட்டி அகமும் முகமும் மலர்கிருள். அளவிறந்த களிப்பால் தேவி ஒன்றும் உரைக்காது இருப்பது கண்டு அனுமன் இராமன் சொல் பொய்க்குமோ என்று கூறுகிருன்.

''நீதி வித்தகா! எல்லேயற்ற மகிழ்ச்சியே என் மௌனத் திற்குக் காரணம் என்பதை உணராயோ. பாக்கியம் பெரும் பித்தும் பயக்குமோ? சொல்லாய். முன் என்னேச் சிறையி லிருந்து நீக்குவதாகக் கூறிஞய் அவ்வாறே இன்று செய்தனே. உன் உதவிக்கு மூன்று உலகங்களே அளிப் பினும் குறைவுடையதாகுமே! 154'நின்னேயென் தலேயிஞற் ருெழ வேதகுந் தன்மையோய் ஆதலால் ஐய! ஒன்றும் உரைக் காமல் இருந்தேன். தூய மணி போன்று விளங்கும் தூதனே நான் என்ன செய்ய வேண்டும் என்பதை நீயே கூறுவாய்'' என்று தேவி வேண்டுகிருள். தேவியை உடன் அழைத்துச் சென்று இராமபிரான் பக்கம் சேர்ப்பதைத் தவிர வேறு செயல் தனக்கு என்ன உண்டு என்று வினவுகிருன். திரிசடை நீங்கிய அரக்கியரை அழிக்க வேண்டுமென அனுமன் கேட்க அரக்கியரே தேவியைச் சரணடைய, சீதை அனுமனே நோக் கிக் கூறுகிருள்.

''தூய்மையோய்! இந்த அரக்கியர் இராவணனின் ஏவலால் என்னிடம் கடுமையாக நடந்துகொண்டார்களே ஒழியத் தாமாக இவர்கள் எனக்குத் துன்பம் இழைக்க வில்லே. யான் செய்த வினேயிஞல் இவ்விடர் தான்

153 யுத்த-II மீட்சிப்-3937
154 யுத்த-II மீட்சிப்-3948

அடுத்தது. புந்தியோய்! கூனியினும் இவர் கொடியவரோ? அரக்கியர் மனம் நோக ஏதும் செய்துவிடாதே. எனக்கு நீ இவ்வரம் தந்தருள்வாய்'' என்று சீதை வேண்டுகிருள், அனுமனும் அதற்கு இசைந்து தாழ்ந்து நிற்க அவளை இராமபிரானின் ஆணையால் அழைத்து ஏக வீடணன் அங்கு வருகிருன்.

சீதை தனக்கு அனுமன் செய்த உதவியினை எண்ணி,

155''சீலமுங் காட்டியென் கணவன் சேவகக்
கோலமும் காட்டியென் குலமும் காட்டியிஞ்
ஞாலமுங் காட்டிய கவிக்கு நாளருக்
காலமுங் காட்டுங்கொ லென்றன் கற்பு''

என்று தனக்குத் தானே கூறுவதிலிருந்து அனுமன் மீது அன்னை வைத்துள்ள பாசத்தை நாம் அறிகிறோம்.

## 33. [156] அருக்கன் மாணவகன்

வீடணன் கொண்டுவந்த புட்பக விமானத்தில் இராமன் சீதையோடும் இளவலோடும் அயோத்தி செல்ல முற்படும் போது அனைவர்க்கும் விடை அளிக்கிருன். ஆனல் அனைவரும் உடன் வர விரும்பவே அவர்களையும் அழைத்துக்கொண்டு வருகிருன். வழியில் பரத்துவாச முனிவன் அனைவர்க்கும் விருந்தளிக்கிருன். அப்பொழுது இராமன் அனுமனிடம் தன் மோதிரத்தைக் கொடுத்து, பரதனைக் காண விரைந்து சென்று அம்மோதிரத்தை அளித்து அவன் துயரை நீக்கவும், அவன் மனக் கருத்தினை அறிந்து வரவும் வேண்டுமென ஆணையிடுகிருன்.

தந்தை வாயுவின் வேகமும், நாயகனின் வெஞ்சிலை வேகவும் பின்னிடவும், தனது மனமும் தனக்குப் பின்னே

155 யுத்த-II மீட்சிப்-3976
156 யுத்த-II மீட்சிப்-4180

வரவும் அனுமன் பறந்து இடையில் குகனுக்கும் செய்தியினைக் கூறி விரைந்து வருகிருன்.

157 ''வாக்கிற் பொய்யான் வரும்வரு மென்னுயிர்
போக்கிப் போக்கி யிழக்கும் பொருமலான்'' பரதன்

சோதிடர் மூலம் வரும்நாள் அன்றுதான் என்று அறிகிருன். இராமன் தான் குறித்த நாளில் வராததனுல் இனி உயிர் வாழ்வதில் பயனில்லை என்று எண்ணிய பரதன், தம்பி சத்துருக்கனனை நோக்கி, ''தம்பி! நீ எனக்கு ஒரு வரம் தர வேண்டும். அண்ணனே வரவில்லை. நான் முன்கூறியபடி குறித்தநாள் கடந்து வாழ விரும்பவில்லை, எனவே நீ ஆட்சி ஏற்பாய். நான் எரியில் மூழ்கி இறப்பேன்'' என்று கூற அவனே பெரிதும் துயர் அடைகிருன்.

பரதன் தம்பியை எரியினை அமைக்க வேண்டுகிருன். எரியில் மூழ்க இருந்த மகன் பரதனைத் தாய் கோசலை தடுத்து நிறுத்தப் பெரும்பாடுபடுகிருள். ''தாய் சொல்லைக்கேட்டும் தந்தை சொல்லைக் கேட்டும் நடப்பவன் இராமனே. அன்பு செலுத்த வேண்டிய இடத்து அன்பற்றவன் போல நடத்தலும் அவனுக்கே உரித்து! நான் அண்ணுவைப்போல அத் தொழில்களைச் செய்ய ஒருப்படேன். இராமபிரானிடத்து நான்கொண்ட அன்பினை என் செயலால் உங்களுக்கு உணர்த்துவென்'' என்று கூறிய பரதன் எரியிடம் நோக்கி விரைகிருன். குன்று போன்ற இராகவன் தூதன் அங்கு வருகிருன்.

158 ''ஐயன் வந்தன ஞரியன் வந்தனன்
மெய்யின் மெய்யன்ன நின்னுயிர் வீட்டினுல்
உய்யு மேயவ னென்றுரைத் துட்புகாக்
கையி ஞலெரி யைக்கரி யாக்கினுன்

என்று அனுமனின் செயலைக் கம்பர் அழகாகக் கூறுவார்.

---

157 யுத்த-II மீட்சிப்-4128
158 யுத்த-II மீட்சிப்-4160

மாருதி பரதனை வணங்கிக் கையினுல் வாயை மூடி 'ஐய! நின்னை இராகவன் வந்தடையக் குறித்தகாலம் இன்னும் நாற்பது நாழிகைப் பொழுது இருப்பதை அறியவேண்டும். என் சொல் பொய்க்கும் என்ருல் உனக்கு முன் நாயினேன் நெருப்பில் விழ்ந்து இறப்பேன். சூரியன் தோன்றும் வரை எச்செயலும் செய்யாது இருப்பாய். அக்காலமும் கடக்கும் என்ருல் நீயும் உலகுடன் சேர்ந்து பொன்றுவாய். இராமன் வருகைக்குத் தாமதம் பரத்துவாசனின் விருந்தோம்பலைத் தட்டாமல் இருந்ததுதான்'' என்று அருக்கன் சிடனுன அனுமன் பரதனிடம் கூறி இராமன் அளித்த மோதிரத்தையும் அளிக்கிருன். விடமுண்டவர்க்கு மருந்து கிடைத்தால் எத்துணை மகிழ்ச்சி ஏற்படுமோ அத்துணை மகிழ்ச்சியினைப் பரதன் இராமனின் மோதிரத்தைக் கண்டதும் அடைகிருன்.

தன்னை யாரென்று கேட்ட பரதனுக்குத் தன் வரலாற்றை அனுமன் கூறித் தன் பெரிய உருவத்தைக் காட்டுகிருன். பரதன் வேண்ட மாருதி தன் வடிவைக் குறைத்துக் கொள்கிருன். பரதன் பல பரிசுகளை அனுமனுக்கு வழங்குகிருன். அனுமன் அயோத்தியின் செய்தியினை இராமனிடம் திரும்பி வந்து கூற அவனும் [159]'யாயினு மன்பினு யாஞ்செய் மாதவம்' என்று பாராட்டி அணைத்துக்கொள்கிருன். அனைவரும் அயோத்தியை வந்தடைய, எல்லாரும் மகிழ்ச்சியில் திளைக்கிருர்கள்.

[160]அரியணை யனுமன் ருங்க வங்கதனுடைவாள் பற்றப்
பரதன் வெண் குடைகவிக்க விருவருங் கவரி வீச
விரை செறி கமலத் தாள்சேர் வெண்ணெய்மன்
சடையன்றங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான்
மௌலி

அனுமன் அரியணையைத் தாங்க அறத்தின் நாயகனின் முடி

---

159 யுத்த-II மீட்சிப்-4250
160 யுத்த-II மீட்சிப்-4315

சூட்டு விழா இனிது நடைபெறுகிறது. அனைவரும் பிரியா விடை பெற்றுத் தம் இருப்பிடம் செல்கிறார்கள். இராமனாட்சி வையகம் துயருறாமல் காக்கிறது.

# 34. செங்கைத் தனு போல்பவன்

இராம பிரானின் சிவந்த கையில் சிறந்து தோன்றும் தனு போல்வான் அனுமன் என்று வாலி இறுதிக் காலத்தில் கூறிய சொல் பொய்க்குமோ? இராமனின் வில்லாற்றலுக்கு ஈடேது? இணையேது? மறத்தை அழித்து அறத்தைக் காக்கும் திறன் அவ்வில்லுக்கு உண்டே! அதைப்போல அனுமனின் செயலும் அமையக் கண்டோம். குரங்கு உருவில் தோன்றினாலும் உயர்ந்த ஞானி அன்றோ அவன். வேத சாத்திரங்களைச் சூரியன் தேர்முன் நடந்து கற்றவன் வேறு எப்படி இருப்பான்? மாற்றாரையும் ஈர்க்கும் செயலாற்றல் உடைய அனுமனை வாழ்த்துவதைத்தவிரப் பாராட்டிவிட முடியுமா? எடுத்த செயலை இனிதே முடித்த அவன் திறத்தை என்னென்று புகழ்வது? அதற்கு அவன் பட்ட வேதனை சொல்லும் தரத்ததோ? அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்பதில் தான் எத்துணை உறுதிப்பாட்டோடு விளங்குகிறான்! தடைகள் வரும்பொழுது அவற்றைத் தூளாக்கித் தேவியைக் கண்டானே. அறத்தின் நாயகனால் இருமுறை தழுவப் பட்டானே. தேவர்கள், வானரர்கள், முனிவர்கள், உலகோர் வாழ்த்த அருஞ்செயல்கள் புரிந்தவன் அல்லவா? அவனுடைய சொற்றிறத்தைப் புகழ்வதா? கடல்தாண்டிய அழகினை வியப்பதா? உடல்உரனையேநம்பி உடற்றிய போர்த்திறத்தைக் கூறுவதா? பகைவர் ஊரில் தேவியைக் கண்டு, தேற்றிய விதத்தைப் பகர்வதா? அரக்கர் செய்த வஞ்சனைச் செயலைக் கண்டு வெகுண்டு ஊரை நெருப்பில் இட்டுக் கொளுத்திய

செயலை விளம்புவதா? இராவணனையே நிலைகுலையும்படிக் குத்திய மாண்பினை உரைப்பதா? மருந்து மலையால் அனை வரையும் காத்த திறனை வெளியிடுவதா? புகழ் வேண்டாது உண்மை ஊழியனாய்ப் பணிபுரிந்த தொண்டனின் புகழ் கூறும் தரத்ததோ? ஆம்! தொண்டர்தம் பெருமை சொல்ல வும் படுமோ? கவிஞர் பெருமானோடு நாமும் சேர்ந்து காற்றின் சேயினை வாழ்த்துவோம். வணங்குவோம். இராமபிரான் புகழ்பாடும் இடமெல்லாம் சிவபெருமானின் அமிசமான அனுமன் அடியனாய்த் தாழ்ந்து நின்று மகிழ்ந்து வாழ்த்து வான் என்று எண்ணி மகிழ்வோமாக.

---